5 GENDER EQUALITY UNSDGs



கருவெளி ராச.மகேந்திரன்



# அவளோடு ஒரு பயணம்

கவிதை தொகுப்பு




அவள் உலகத்தை அவளுக்காக சொல்லிவிடும் சிறு முயற்சி

கருவெளி கலையகம் வெளியீடு 94455 28556

# அவளோடு ஒரு பயணம்

## தொகுப்பு 01

---

அவள் உலகத்தை அவளுக்காக சொல்லிவிடும் சிறு முயற்சி


**கருவெளி ராச.மகேந்திரன்**

**தேனி**


## To Support UNSDGs' Goal 5: Gender Equality

Gender equality is not only a fundamental human right, but a necessary foundation for a peaceful, prosperous and sustainable world.

## ஐக்கிய நாடுகளின் நிலையான வளர்ச்சிக்கான இலக்குகள்

## இலக்கு 5: பாலின சமத்துவம்

பாலின சமத்துவம் என்பது அடிப்படை மனித உரிமை மட்டுமல்ல. அமைதியான, வளமான மற்றும் நிலைத்திருக்கக் கூடிய ஒரு உலகை கட்டமைப்பதற்குத் தேவையான அவசியமான அடித்தளமாகும்.

---

**நூலின் பெயர்:** அவளோடு ஒரு பயணம் (கவிதைகள்) தொகுப்பு 01 | **ஆசிரியர்** : கருவெளி ராச.மகேந்திரன் | **விலை** : 111 வது பக்கத்தை பார்க்கவும் | **வகை** : இபுத்தகம் | முதல் பதிப்பு : 15 சனவரி, 2019

---

**Book Name** : Avalodu Oru Payanam (Kavithaikal) Thoguppu 01 | **Author** : Karuveli RaSa. Mahendran | **M.R.P.** : Check Page Number 111 | **Category:** EBook | First Edition : 15 Jan, 2019

**வடிவமைப்பு மற்றும் வெளியீடு :**

ரா.மகேந்திரன், கருவெளி கலையகம், தேனி -625531

karuveli.mahendran@gmail.com | **94455 28556** | **https://www.karuveli.wordpress.com**

---

உலகிலுள்ள அனைத்து

பெண் குழந்தைகளுக்கும், சகோதரிகளுக்கும்,

முதியோர்களுக்கும், திருநங்கைகளுக்கும்,

அவர்களுக்காக குரல் கொடுத்து செயலாற்றும்

ஆண்களுக்கும்,

என் தாய்க்கும், தந்தைக்கும்,

அனைத்து ஜீவன்களுக்கும்

இப்படைப்பு சமர்ப்பணம்!

## நூலைப் பற்றி..

இந்த புத்தகத்தின் தலைப்பும் அட்டைப் படமும் ஒரு உணர்வைத் தூண்டி உங்களை வாசிக்க ஊக்குவித்திருக்கலாம். ஆனால் படித்து முடிக்கும் போது நிச்சயமாக வேறொரு பரிமாணத்தில் உணர்வீர்கள் என்பதனை மட்டும் உறுதியளிக்கிறேன். இப்படைப்பில் கடினமான விசயம் என்னவென்றால் எனக்கு பரிட்சயமற்ற அல்லது புரியவே புரியாத “பெண்கள் உலகை அவ்வாறே பிரதிபலிக்கும்” நுட்பமான முயற்சிக்கான இப்பயணத்தில் முதலடி எடுத்து வைப்பதற்கான எனது அச்சம் தான். உண்மையில் என்னால் முழுவதும் பிரதிபலித்து விட முடியாது என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இருந்தும் இந்த கவிதைத் தொகுப்பை வெளியிடத் தைரியம் கொடுத்தது இதற்கு முன் அங்கொன்றும் இங்கொன்றுமாக இத்தொகுப்புக்காக எழுதப்பட்ட கவிதைகள் பல பெண்களின் பேராதரவைப் பெற்றது தான். அந்நிகழ்வுகளுக்கும் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும் கொஞ்சம் ஆழமாக யோசிக்கையில், உண்மையில் நான் இம்முதல் பாகத்தில் சொல்லி இருப்பவை யாவும் சமூகத்தில் அவர்களின் நிலையை எதிரொலிப்பவையாக இருக்குமென்றே நம்புகிறேன். இப்படைப்பில் எனக்கான சுதந்திரம் முழுவதும் பறிக்கப்பட்டது என்றே சொல்ல வேண்டும். ஒவ்வொரு எழுத்தும் வார்த்தையாகும் போது அதன் பின் இப்புவியில் வசிக்கும் ஏதோ ஒரு சகோதரி, பெண், குழந்தை, தாய் இனியும் என்னென்ன உறவிலிருப்பார்களோ அத்தனை உறவுமாய் நின்று என்னை கேள்விகள் கேட்டுக் கொண்டே என்னோடு அவர்கள் என் மனட்சாட்சியாய் பயணித்தது எனக்கான சுதந்திரத்தை முழுவதும் பறித்துவிட்டது. நிகழ்கால பிரச்சனைகளை சமரசமின்றி சொல்வதற்கு அதுவே மனவலிமையும் கொடுத்தது.

சவால்கள் நிறைந்த சூழலில், களத்தில் நமக்குள் மறைந்து கிடக்கும் சக்தியையும் நாம் உணர்கிறோம், வெளிப்படுத்துகிறோம் என்பது அனுபவ அறிவாகி விட்டது இந்த முயற்சியின் வாயிலாக. **“அவளோடு ஒரு பயணம்”** உண்டென்றால் **“அவனோடு ஒரு பயணம்”** இருக்கத் தானே செய்யும், விரைவில் சந்திக்கிறேன்… அவனோடு ஒரு பயணம் வாயிலாக..

*அன்புடன் | கருவெளி ராச.மகேந்திரன் | ஆசிரியர்*

## அவளோடு பயணிப்போம்

## தரணியிலே நான் யார்?

தாய் என்றார்கள்
தாய் மொழி என்றார்கள்
தான் மண் என்றார்கள்
தன்னிகரில்லா படைப்பென்றார்கள்
தரணியிலே வந்து சேர்ந்ததும்
தாழ்விலும் தாழ்வான வாழ்வை..
தடை நிறைந்த வாழ்வை
தப்பாமல் உறுதி செய்தார்கள்!
தரணியெங்கும் நிறைந்திருக்கும் இவர்கள் யார்?
தவறுதலாய் இம்மண்ணிற்கு வந்த நான் யார்?

## ஊமைகளின் குரல்

ஊமைகளின் குரல் ஒன்று
உம் செவி வந்து சேரும்!
தீட்டி வைத்திருங்கள்
உங்கள் செவிகளை!
ஊமைகளின் குரல் ஒன்று
உம் செவி வந்து சேரும்!

கேட்காததாய் இதுவரை
நீர் நடித்திருந்தது போதும்!
இனியும் செல்லாது..
உம் நடிப்பு நன்றாக இருந்தாலும்!

அளவில்லா பதக்கங்கள்
அள்ளி குவித்தாயிற்று..
அநியாயமாய் எமது
உதிரம் குடித்தாயிற்று!

நல்லவராய் நடித்தது போதும்..
நாவால் நாளும்
நடித்து நகைத்தது போதும்!
உமையின் குரல் ஒன்று
உங்கள் உண்மை உரைக்க
உம் செவி வந்து சேரும்!

கேட்காததாய் இதுவரை
நீர் நடித்திருந்தது போதும்!
இனியும் செல்லாது
உம் நடிப்பு எம்மிடத்தில்!

## போதும்.. போதும்..

அஞ்சி நீ செத்தது போதும்!
நடுங்கி நீ - கல்லறைகளில்
இதுவரை பதுங்கியது போதும்!
கண் முன்னே உன் உரிமைகள்
பறிபோக பார்த்திருந்தது போதும்!
அடிமையாய் கைகட்டி வாய் பொத்தி
தலை கவிழ்ந்து வாழ்ந்தது போதும்!

வாரிக் கொடுத்து வாழ்ந்த நீ - கொடுக்கும்
கைகளுக்காக கையேந்தி காத்திருந்தது போதும்!
நயவஞ்சகங்களை நம்பி நித்தம்
நீ ஏமாந்து வீழ்ந்தது போதும்!
மூச்சுக் காற்றையும் நஞ்சாக்கும்
வேசக்காரனிடம் ஏமாந்தது போதும்!

போதும்.. போதும்
இதுவரை நீ அடிமையாய்
இங்கே வாழ்ந்திருந்தது போதும்!
உன் தடைகள் உடைக்க
உன் விலங்கு அறுக்க
உன்னையன்றி யாருமில்லை உனக்கு..
உடனே எழுந்து நீ வா!

போதும்.. போதும்
இதுவரை நீ அடிமையாய்
இங்கே வாழ்ந்திருந்தது போதும்!
உடனே எழுந்து நீ வா!

## இரவெல்லாம்

தன் அடி வயிற்றில் வைத்த கைகளை
அவள் எடுக்கவே இல்லை!
குழந்தையென அழுகும்
பூனைகளும் நிறுத்தவே இல்லை!
அழுகையை!

#குழந்தையில்லா ஒரு தாயின் நிலை

# கேளடா

சொல்லாத கோபம் இருக்கடா?
நீ கேட்காத கோபம் இருக்கடா?
நீ பார்க்காத கோபம் இருக்கடா?
பார்க்கும் போதோ..
கேட்கும் போதோ..
கேட்ட பின்னோ..
நீ நீயாக இருக்கப் போவதில்லையடா!

# அவள் யாரவள்?

வழி மறித்து சொல்கிறாள்
வலியைச் சொல்கிறாள்
தன் வலியைச் சொல்கிறாள்
அது இன்னொருத்திக்கும் ஆகாது என்று
தன் ஆதங்கத்தை சொல்கிறாள்!

இடைவிடாது சொல்கிறாள்
தான் சொல்லத் துடித்திருந்ததெல்லாம்
தருணம் பார்த்து சொல்கிறாள்!
தடை இல்லையென்றறிந்து சொல்கிறாள்!

என்னோடு பயணித்த நிமிடங்கள்
இனியும் தொடர்ந்திடும்
அந்த நம்பிக்கையில்..
அகம் மலர்ந்து தன் அகம் சொல்கிறாள்!

இடித்துரைக்கிறாள்..
இதயத் துடிப்பை இடைவிடாது உரைக்கிறாள்!
அவள் உலகுக்கு என்னை அழைக்கிறாள்!
அவை குறித்து தன் பார்வையை சொல்கிறாள்!
இவள் யாரிவள் இடையில் என்பீர்கள்..
அவள் யார் யாராகவோ..
நம்மோடே நானிலத்தில் பயணிக்கிறாள்!

சொல்லிக் கொண்டே இரு!

உன்னிடம் சொல்ல வேண்டியவையெல்லாம்
மௌனத்தால் சொல்கிறேன்!
என்னிடம் சொல்ல வேண்டியவையெல்லாம்
நான் சொல்ல வேண்டியவையெல்லாம்
வார்த்தைக் கோர்வைகளில் நீ சொல்கிறாய்!
சமூகத்தில் நான் ஊமை!
சமூகத்தில் நீ ஊமைகளின் குரல்!
சொல்லிக் கொண்டே இரு!
இந்த ஊமைகளுக்கென!
நீ சொல்லிக் கொண்டே இரு!

#ஏதோ ஒரு கவிதையை வாசித்து விட்டு யாரோ ஒருவர் கைபேசியில் அழைத்துச் சொன்ன வார்த்தைகள். நான் சொல்லிக் கொண்டே இருக்கிறேன்

# பெற்றோரே!

அநீதியை சொல்லி வளர்த்தெடுங்கள்!
நீங்கள் அநீதியின் பக்கம் என்றால்..
நீதியை சொல்லி வளர்த்தெடுங்கள்..
நீங்கள் நீதியின் பக்கம் என்றால்..
பாவம் குழந்தைகள்..
குழம்பித் தவிக்கிறார்கள்..
சாகும் அந்த நொடிவரை!

#குழந்தை வளர்ப்பில் முக்கிய பங்களிக்க வேண்டிய பெற்றோர்களே குழம்பிய நிலையிலிருப்பதால் சமூகத்தின் நிலையும் அதுவாகிறதோ என்ற வினா எனக்கு முன்னே எப்போதும் விடை தேடிக் கொண்டே இருக்கிறது.

## பெண் சிசுவே

தாயும் உன் மரணம் வேண்டிட..
பாவம் நீ என்ன செய்தாயோ?
பாவம் ஏதுமறியா பாவியாய்
பாவிகளின் உலகில்
பிரசவிக்கப்பட்டதன்றி!

#பல்வேறு காரணங்களுக்காக பெண் குழந்தைகளை, பெண் சிசுக்களை பெண்களே அழிக்கும் நிலை இன்னும் இந்த மண்ணில் நிலவுகிறது என்பது மிகவும் வருந்தமளிக்கிறது.

## உறவு ஒன்று உரிமைகள் வேறு

ஊரெல்லாம் உலகெல்லாம்
உனக்கு ஒன்றென்றானாலும்..
உன்னிடம் எனக்கென உண்டு
தனி உரிமை என்கிறாள்!

பெற்றெடுத்தவள் ஓர் அன்னை என்பதால்..
உரிமை கொண்டாடி வருகிறாள்
உடன் பிறந்த சகோதரி!

வேறு கருப்பையில் பிறந்தவள்
எப்போதும் போல்
விலகி நின்று பார்த்திருக்கிறாள்!
என் இருப்பையும் இல்லாமையையும்!
சொல்லவும் சொற்களின்றி!
கேட்கவும் வார்த்தைகளின்றி!

#உடன் பிறந்த மற்றும் உடன் பிறவா சகோதரிகளின் நிலை..

# நீ

உடைத்தெறி!
உள்ளிருக்கும்
உன் அச்சத்தை!
நீ

அடங்கி கிடக்க
பிறப்பெடுக்கவில்லை
இம்மண்ணில்
நீ!

அடிமையாய் கிடக்க
பிறப்பெடுக்கவில்லை
இப்புவியில்
நீ!

## அம்மாவும் மூதாட்டியும் நானும்!

முகம் தெரியா மூதாட்டி ஒருத்தி
அம்மா என்றழைக்கிறாள்!
பெண் இல்லா வீட்டிலிருந்து
நான் வந்து நிற்பதறியாமல்
முகம் தெரியா மூதாட்டி ஒருத்தி
அம்மா என்றழைத்தபடி இருக்கிறாள்!

குரல் கேட்டு ஆண் என்று கணித்தவள்
அவள் தேடி வந்த அம்மா
அங்கு தான் இருப்பதாய் கூறுகிறாள்!
நாடு சூது நிறைந்ததென
நாளும் சொல்லி வளர்க்கப் பட்ட
என் பொது மூளை..
பக்கத்து வீட்டு அம்மாவைக் காட்ட
அனுமதிக்க மறுத்து அஞ்சுகிறது!

அன்பின் பக்கம் நின்ற
அந்த ஒரு நொடியில்
அச்சம் அகன்று பிறக்கிறேன்
மறுபடியும் ஓர் உயிராய்!
அவள் கைபிடித்து அழைத்துச் செல்கிறேன்
பக்கத்து வீட்டு அம்மாவைக் காண்பிக்க!

இருபது அடிகளில் அடைந்து விடும்
அந்தத் தூரத்திற்குள்..
அவள் தன் மூன்று மகள்களின்
நிலை சொல்கிறாள்!
சமூகத்தின் அவலத்தை தோலுரித்து
எனக்குச் சொல்லுகிறாள்!

தான் பார்க்கச் சென்றதாலேயே
வேலையிழந்த தன் மூன்றாம் மகளின்
கதையைச் சொல்லுகிறாள்!

காலையில்.. அப்போதே விடிந்த
அந்த பனி விழும் காலையில்
கண் கலங்கி நிற்க
யாருக்குத் தான் ஆசை..
ஆனால் அவையெல்லாம்
கருணை கொண்ட நெஞ்சுக்குத் தெரிவதில்லை!
பாவம் கண்ணீர் வடிக்கும்
இரு கண்களுக்கும் தெரிவதில்லை!

இரு நேரங்களாய் உணவின்றி உலவும்
நிலையைச் சொல்லுகிறாள்!
தன் ஆயிரம் ரூபாய்
யாரிடமோ பறி போனதைச் சொல்லுகிறாள்!

மூன்றாம் மகளை பணி நீக்கம் செய்தவனின்
அநீதியைச் சாடுகிறாள்!
நேற்றும் இதே இடத்தை
தேடி வந்து போனதைச் சொல்லுகிறாள்!
பக்கத்து வீட்டு அம்மா..
இதற்கு முன்பும் உதவியதைச் சொல்லுகிறாள்!

அத்தனையும் என் பொது புத்தியில்
நம்பிக்கை பிறக்கத் தான் சொல்லுகிறாள்!
அந்தப் புத்தி சமூகம் கட்டமைத்த அந்தப் புத்தி
சந்தேகத்தில் சஞ்சலித்துக் கொண்டே இருக்க!

அறத்தின் கரம் பிடித்து
நடை பழகும் என் மனத்தின் வழி நடந்து
இருபது அடிகளை அவளோடு கடந்து
அடுத்த வீட்டின் அந்த இரும்புக் கதவுகளை
அச்சம் கலந்த நம்பிக்கையோடே திறக்கிறேன்!

உள்ளே நுழைய அஞ்சி - அவள்
நாய்களின் இருப்பை விசாரிக்கிறாள்!
திறந்து கிடந்த வீடுகள் மறைந்து போய்..
நல்வரவு என வாசல் இருந்த வீடுகள்
கொஞ்சம் கொஞ்சமாய் அழிந்து போய்..
நாய்கள் ஜாக்கிரதை என வரவேற்கும்
வீடுகள் எங்கும் பெருகிப் போய்..
வாழும் நாட்டில் அவள் அச்சம் நியாயமானதே!

நாயின் இருப்பிடத்தைச் சொல்லி..
அவள் அச்சத்தோடு என் அச்சத்தையும் நீக்கி..
அவளோடு நானும் உள் நுழைந்தேன்..
மீண்டும் அழைக்கிறாள் ஓங்கி குரலெடுத்து
அந்த மூதாட்டி “ அம்மா “ என்று
அந்தக் குரல் நாட்டின் அவலக் குரலாய்..
கைவிடப் பட்ட முதியோர்களின் குரலாய்..
என் இதயத்தின் அறைகளெல்லாம் எதிரொலிக்குது!

பூட்டி இருந்த கதவுகள் திறந்து
அந்த மூதாட்டி அழைத்த அம்மா வருகிறாள்!
கண்டதும் அவா நிறைந்த வார்த்தைகளால்
கருணை கொண்ட வார்த்தைகளால்
உறவு கூறி அழைத்து
விரைந்து வந்து பேசுகிறாள்
அந்த மூதாட்டி அழைத்த அம்மா!

அந்த மூதாட்டியின் தலை கோதி
நான் அந்த மூதாட்டியிடம் சொல்லவும் தயங்கிய
அவள் ஆடைகளை சரி செய்து..
தன் பேச்சைத் தொடர்கிறாள்
அந்த மூதாட்டி தேடி வந்த அம்மா!

வார்த்தைகள் ஏதுமின்றி..
பெருங்கடமை நிறைவேற்றியதாய்..
பொதுப் புத்திக்கு பாடம் கற்பித்ததாய்..
நான் நடக்கிறேன் என் வழியே..
அறத்தின் கரம் பிடித்து
வழி நடக்கும் என் மனத்தின் வழியே!
புத்திக்கு புத்தி சொல்லியபடி!

#சென்னையில் எம்.எம்.டி.ஏ. பகுதில் இருந்த காலத்தில் ஒரு அதிகாலை நிகழ்ந்த நிகழ்வையே நீங்கள் இங்கு வாசித்து முடித்தீர்கள். நாமும் முதியவர் ஆவோம் என்பதறியாமல் முதியோரை மற்றோரிடம் கையேந்தவிடும் பிள்ளைகள் இம்மண்ணில் மீண்டும் மீண்டும் பிறந்து கொண்டே இருக்கிறார்களா? வளர்த்தெடுக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறார்களா? “அம்மா”வாக, மிகவும் பாசமான, நான் வாடகைக்கிருந்த வீட்டின் முதலாளி அம்மா பல விசயங்களை அந்த ஒரு சில நிமிடங்களில் எனக்குக் கற்றுத் தந்து விட்டார்.

# அறியாமல்

கண்ணீரில் கரைத்து விட
நாளும் முயல்கிறாள்!
பாவம்..
அவள் அறிந்திருக்கவில்லை!
அவள் கரைக்கத் துடிக்கும் நெஞ்சம்
கரைந்து காணாமல் போய்
எத்தனையோ காலங்கள் ஆயிற்றென்று!

## விட்டுத்தான் வந்தேன்

பற்றிய கரங்களை
அவள் விடவே இல்லை!
அதை நானும்
அறியவே இல்லை!
எழுந்து புறப்பட முனையும் வரை!!

புறப்படும் நேரத்தில்
விட்டு விட்டுத்தான் வந்தேன்
பற்றிய கரங்களை!

## என் வீரத் திருமகளே!

உன் கால் தடம் பட..
காத்திருக்குதடி..
போராட்டக் களங்கள்!
இனியும் அடிமையாய்
நீ உள்ளே இருப்பது ஆகாது
என் வீரத் திருமகளே!

உன்னை வைத்துத் தான்
பிரித்து வைத்திருக்கான்
அப்பிரிவுகளை அழித்தொழிக்க
உன் முதலடி எடுத்து நீ வையடி!

போற்றுவான்.. போற்றுவது போல்!
ஏற்றுவான்.. ஏற்றுவது போல்!
ஆனாலும் அடிமை விலங்கு பூட்டுவான்!
அவன் நாசவேலைகள் அறிந்தும்
அமைதியாய் இருப்பது ஏனடி?

உன் கால் தடம் பட..
காத்திருக்குதடி..
போராட்டக் களங்கள்!
இனியும் அடிமையாய்
நீ உனக்குள்ளே இருப்பது ஆகாது
என் வீரத் திருமகளே!

## அறிந்த நாள் முதல்

பிரிந்து விடாமல் இருக்க
பிரிந்தே இருக்கிறாள்!
உறவாகி விடாமல் இருக்க
உறவாய் இருக்கிறாள்!
அறிந்த நாள் முதல்!

## அவளே கேட்கிறாள்!

அவளிடம் சொல்லிச் சொல்லி
அத்தனை சொற்களும்
அவளாகி விட்டன!
ஆனாலும் அவளே கேட்கிறாள்!
அவளை வார்த்தைகளாக!

## அவள் தேடல்!

உண்மையைத் தேடுகிறாள்
உலகெல்லாம் அவள்!
அவளின் உண்மை
அவளுக்குத் தெரியவே
அவள் தேடல் உதவும்!
அதுவரை தேடட்டும்!

தேடிக் கிட்டியதும்
உள்ளே துவங்குவாள்
தன் தேடலை..
அதுவரை தொடரட்டும்
அவள் தேடல்!

# ஆடுகிறாள்!

தாள் மேல் தாள் பதித்து
ஆடுகிறாள்!
விளையாடுகிறாள்!
தாள் தடம் பார்த்து
நடை பயின்றவள்!
மகிழ்ச்சியால் கொண்டாடுகிறாள்!

#அஞ்சி அஞ்சி விலகியிருந்த தங்கை ஒரு நாள் என் தாள் மேல் தன் தாள் பதித்தாடிய நிமிடங்கள்

## வாய்ப்பு கிட்டுமோ?

அவள் உள்ளம் சொல்ல
அவளுக்கு யார் கொடுப்பார்
அந்த வாய்ப்பை?
அவளையன்றி !

ஆனால் அவளோ காத்திருக்கிறாள்!
அவள் ஆயுள் முழுவதும்
அவளைச் சுற்றியுள்ள யார் யாருக்கோ?

# திலகமும் கவினும் ஆண்டாளும் நானும்

சொல்ல வேண்டிய சொல்லை
என் உள்ளத்தின் சொல்லை
உன்னிடம் சொல்லி..
மூவைந்து ஆண்டுகள்
நகர்ந்தோடி விட்டது!
மூவைந்து நாழிகையாய் !!

உன்னோடு நான் பயணித்த நொடிகள்
அவை கொடுத்த அனுபவங்கள்
அரை நூற்றாண்டை நிறைத்து விடும்!
அவையே காலங்களை இல்லாமல்
அப்படியே உறையச் செய்தும் விடும்!

கரடும் முரடும் எல்லோருக்கும்
அவர்தம் வாழ்விலிருக்கும் !
உன் வாழ்விலிருக்கும்..
நீ வாழ்வாய் ஏற்றிருக்கும்
நானே அப்படித்தான் !

அழகுக்கவியாய் கவினும்..
உனக்கும் எனக்கும் சமதானம் செய்யும்
ஆண்டாள் ஆத்தாவும்..
இந்த முரடனின் முரட்டுத்தனம்
அத்தனையும் மட்டுப்படுத்தும் மந்திரங்கள்!

கோபங்கள் வந்து
கோலோச்சு செய்யும் நொடிகளிலெல்லாம்..
உதவிக்கரம் கேட்டு நிற்பேன் !
அதே கரடுமுரடான கரங்கள் தான்!
ஆனாலும் உன் கரம் கொடுத்து
மீட்டெடுப்பாய் அன்பையும் வாழ்வையும் !

என் ஒற்றைக் கால் தவங்கள் அல்ல..
உன் எல்லையில்லா அன்பே
அத்தனையும் சாத்தியமாக்குதடி
இதுவே சத்தியமடி திலகம்!

உலகெல்லாம் என் சொல் கேட்க
திரண்டிருக்கும் நொடியிலே..
மேடை மேல் நிற்கும் நானோ
உன் சொல் உன் இருப்பில்
உள்ளத்தில் உறுதி கொண்டிருப்பேன்!

இணையாய் ஏற்க விருப்பம் சொன்ன
இன்னொரு கதிரைத்தான் உனக்கும்
உன்னைப் போல எனக்கும் பிடிக்கும்!
இருக்கும் சூழலில் அவனைத் தான்
உன்னைப் போல் தேடியபடி
நித்தம் பயணிப்பதை உன்னிடமே
நான் வந்து சொல்வதெப்படியோ?

நான் மட்டும் நான் அல்ல..
நீயே நான் என்று
நான் சொல்லத் தேவையுமில்லை !
இணையாய் உன்னோடு
இணைந்து பயணிக்கவே
இவ்வாழ்க்கை என் திலகமே !!

அன்போடு
கதிர்

கதிர் - திலகம் அவர்களின் 15வது திருமண நாளுக்கு எழுதியது

#சமூகப் பணியில், யாரும் எடுத்துச் செய்ய நடுங்கும் சமூகப்பணியில் களமாடி வரும் எவிடன்ஸ் கதிர் மற்றும் திலகம் இணையர் திருமண நாள் அன்று, கதிர் அவர்கள் அவரது இணையர் திலகம் அவர்களுக்கு எழுதும் மடல் போல் எழுதிய திருமண நாள் வாழ்த்துச் செய்தி. இதைப் இப்புத்தகத்தில் இணைப்பதற்குக் காரணமுண்டு. ஒரு போராட்டக்காரனின் வாழ்வும் மனமும் சொல்லும் என்ற நம்பிக்கை கொண்டு. அப்பயணத்தில் இணையர்களின் பங்களிப்பை எதிரொலிக்குமென்று.

## படைப்பாளினிகள்

ஒரு படைப்பாளினி
தன் படைப்புகளால்..
உங்களை கவருபவள் மட்டுமல்ல!

உங்கள் வாழ்வை பிரதிபலிப்பதால்
அவள்..

சமூகத்துடன் உங்களுக்காக
நீங்களாக குரல் கொடுப்பதால்..
சமூகத்தை நாளும் கட்டமைப்பதால்..
உங்களுக்குள் கருத்தரித்து..
உங்களால் பிரசவிக்கப்படுகிறாள்!

இன்னும் கருத்தரிக்கப்படாமல் பிரசவிக்கப்படாமல் இருக்கும் இச்சமூகத்தின் அனைத்து படைப்பாளினிகளுக்கும் சமர்ப்பணம்

## மாயக்காரிகள் உலகம்

மாயக்காரிகள்..
மௌனத்தாலும் அன்பாலும்
அனைவரையும் மயக்கும்
அழகிய மாயக்காரிகள் நிறைந்தது
இந்த ஒரே பூமி!

## கருப்பு நிலா

அழகாய் அவள் வரைந்த நிலவுக்கு
அவளே பூசுகிறாள் கருப்பு வண்ணம் !

அநீதிகளை காண வேண்டாமென்று
பூமியின் ஒற்றை உறவான நிலவுக்கு..
அத்தனைக்கும் சாட்சியாய் இருந்த
அந்த ஒற்றை நிலவுக்கு
அவளே பூசுகிறாள் கருப்பு வண்ணம் !

இனி இரவெல்லாம் இருண்டே கிடக்கும் !
சொல்லிச் சொல்லி ஓங்கிச் சிரிக்கிறாள்
ஓங்காரமாய் ஒலிக்குது அண்டவெளியெல்லாம் !
அவள் குரல் அழிவே இல்லாமல் !

#ஒரு ஓவியப் போட்டியில் வித்தியாசமாக வண்ணத்தை தீட்டிய குழந்தை சொன்ன வார்த்தைகளின் வலி. இங்கே முழுவதுமாய் சொல்லவுமில்லை.. சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை.

## பிரிவுரைக்கவோ?

மண் ஆளும் மண்ணில்
மதி இல்லா இரவில்
மதி மயக்கும் சொல்லில்
மதியோடு அவன் பாடும் கவியை
மதி மீதான கவியை
மடி மீது சாய்ந்து - அவன்
மடி மீது சாய்ந்து கேட்க
மதியில் நான் கண்ட சொர்க்கம்
மனம் திறந்து சொல்கிறேன்
மற்றொருவரும் கண்டதில்லையடி
மாபெரும் இம்மண்ணில் என் தோழி !!

#ராஜஸ்தானின், பாலைவனத்தில் சுற்றித் திரிந்த ஓர் முழு நிலவு இரவுப் பொழுதில் வந்து சேர்ந்த வரிகள். மண் ஆளும் மண் என்பதன் அர்த்தம் விளங்கி இருக்குமென நம்புகிறேன்.

## துவங்கடி

அடங்கிப் போகவோ..
அடக்கி வைக்கவோ..
யாருக்கும் பயிற்சியளிக்கா சமூகம்
பாலின பாகுபாடுகளை
வென்று நிற்கும் காணடி !

உன்னிடமிருந்தே அதை துவங்கடி !
உனக்குள்ளிருந்து அதை துவங்கடி !
அத்தகைய பயிற்களை எதிர்த்து
உன் குரலை ஓங்கி எழுப்படி !

#பாலின பாகுபாடுகளை குறைப்பதில் அன்னையின் / பெண்களின் பங்களிப்பும் மிகவும் அவசியம் என்பதனை என் அனுபவத்தின் வாயிலாக நான் உணர்கிறேன்.

# இதுவே தருணம்

இதுவே தருணம்
இனியும் தாமதமேனடி?

இதுவே தருணம்
இருளை நீக்கிடடி!

இதுவே தருணம்
இனியும் மௌனமேனடி?

இதுவே தருணம்
இருட்டடிப்பை வெளியிடடி!

இதுவே தருணம்
இருவரும் சமமென்றாகிட !

இதுவே தருணம்
இருவரையும் சமமென்றாக்கிட?

இதுவே தருணம்
இழிசெயல்களை எதிர்த்திட !

இதுவே தருணமடி
இழி செயல்களை
இனி எதிர்த்து
அழித்திடடி!

#மகளிர் தினத்தன்று எழுதப்பட்ட வரிகள்

## நீதி நியாயங்கள் எதற்கு?

ஆணுக்கும்
பெண் வேடமிட்ட ஆணுக்கும்
பிறந்ததாய்
அவர்கள் தான் சொன்னார்கள்!

ஆதலால் பெண்ணிற்கு
அனுமதியும் மறுத்தார்கள்!

பெண்களில் பலர் அதை
ஏற்கவும் செய்தார்கள்!
சிலர் மறுக்கவும் செய்தார்கள்!

அறிவுக்கும் கேள்விகளுக்கும்
அப்பாற்பட்ட நம்பிக்கைகள்
நிறைந்து வழியும் நாட்டில்
நீதி நியாயங்களை
எதற்கு எழுதி வைக்கிறார்களோ?

#இந்தியாவில், கேரள மாநிலத்தில் உள்ள சபரிமலை அய்யப்பன் கோவிலுக்கு பெண்கள் வர உள்ள தடையை நீதித்துறை நீக்கிய பிறகு நிகழும் நிகழ்வுகளின் அடிப்படையில் எழுதப்பட்ட வார்த்தைக் கோர்வைகளில் ஒன்று.

## மீ டூ எதிரொலிக்கட்டும் எட்டுத் திக்கும்

சமூகம்
தன் முகத்திரையை
தானே கிழித்தெறிய
உதவுமோ?
இந்த "மீ டூ" [#MeToo]

துணிந்த மகளிர்
தாமே முன் வந்த
தம் மீதான கொடுமைகளுக்கு
எதிர் குரல் எழுப்பி விட்டனர்!

நிகழ்வுகளால் துணிவை பெற்ற மகளிர்
ஓரடி முன்னே வந்து
தத்தம் வேதனைகளை
பகிர்ந்து கொண்டனர்!

சொல்லப்படாத எத்தனையோ கொடுமைகள்
என் வீட்டுக்குள்ளும்
உன் வீட்டுக்குள்ளும்
ஒளிந்து மறைந்து கிடக்கும்
குரல்வளை இறுக்கப்பட்டு!
அது தளர்ந்து சமமாய்
ஓர் நிலை தோன்றும் வரை
"மீ டூ" எதிரொலிக்கட்டும்
எட்டுத் திக்கும்!

இதன் வழியே சதித்திட்டம்
தீட்டுவோருக்கு பலியாகாமல்
குழந்தைகளும் மகளிரும்
தத்தம் குரலை எதிரொலிக்கட்டும்!
“மீ டூ” எதிரொலிக்கட்டும்
எட்டுத் திக்கும்!

#இந்தியாவில் மீ டூ இயக்கமாக சிறிது பரபரப்பை ஏற்படுத்திய சமயத்தில் எழுதிய வார்த்தைக் கோர்வை.

## என் கண்ணம்மா

ஏன் உறைக்கிறாயோ? அறியேன்.
உன் கண்ணீர்
என் கண்களில் வழிந்தோட
ஒரு போதும் நீ கண்டிருக்க
வாய்ப்பில்லை கண்ணம்மா!

குறையேதுமில்லை என்ற
உன் வார்த்தைகளை நம்பி நம்பி
நாட்களை நகர்த்த
நான் உலகில் உலவும்
ஏதோ ஒரு உயிரல்ல..
உன் உள்ளத்தின் உள்ளமடி
அதை அறிவாயோ கண்ணம்மா!

எனக்காக என்னிடம்
நீ உறைக்கும் பொய்களை
உனக்காக உன்னிடம்
நீ உறைக்கும் பொய்களென்பதறி!

உன்னை.. உன் உலகை
உன்னைப் போல் நானறியேன்!
ஆனாலும் நீ பெற்ற பிள்ளையென்பதை
அறிந்தும் உறைப்பதேனோ
என் உள்ளம் நிறைத்துவிடும் நம்பிக்கையில்
நாளும் பொய்களை கண்ணம்மா!

#நாம் நிம்மதியாக இருக்க வேண்டும் என்பதற்காக தினமும் தன் வலிகளை பொறுத்தும் மறைத்தும் பயணிக்கும் ஒவ்வொரு தாயுக்கும், சகோதரிக்கும், பெண்ணுக்கும் இந்த வரிகள் சமர்ப்பணம்.

## மீண்டும் மீண்டும்

யாரிடம்? எங்கு? எப்போது?
எனத் தெரியாமல்
மௌனிக்கப்பட்டு தவித்திருந்த
எனக்கென துவங்கி வைத்தாள்
என்னைப் போல் இன்னொருத்தி
“மீ டூ” இயக்கத்தை!

வாய் திறந்த உடன்
கால தாமதம் ஏன் என்கிறார்கள்?
என் குரல்வளை நெறிக்க துடிக்கிறார்கள்!
எல்லோரும் அமைதி காக்கிறார்கள்!
மயான அமைதி காக்கிறார்கள்!
என்னை மீண்டும் மௌனிக்கிறார்கள்!

#மீ டூ இயக்கம் இந்தியாவில் துவங்கிய அல்லது பெரிதுபடுத்தப்பட்டு பேசப்பட்ட சமயத்தில் பெரும்பாலான மக்களின், ஊடகங்களின் நிலைப்பாட்டினைக் கண்டு எழுதிய வார்த்தைக் கோர்வை.

## உனக்கு ஒரு போதும் புரியாது!

உலகெல்லாம் கூட்டிச் சொல்ல
உன்னத செயலில்லையடா இது!
உள்ளதைச் சொன்னாலும்
உனக்குத்தான் பழி என்று
உலகில் உதித்த நாள் முதல்
உரக்கச் சொல்லிச் சொல்லி
ஊமையாக்கி வைத்து
உள்ளுக்குள் பூரித்து கொக்கரிக்காதே!

உண்மை சொல்லாமல் ஊமையாய்
உன்னுடன் வாழ வருபவளும்
உள்ளுக்குள் அழுது கொண்டிருப்பாள்!
உனக்கு அது ஒரு போதும் புரியாது!

#தங்கள் வலியை, தங்களுக்கு நிகழ்ந்த கொடுமைகளை வெளியே சொல்ல முடியா ஒரு மன நிலையை கட்டி எழுப்பிய சமூகத்தின் முன் ஒலிக்கும் பெண்ணினத்தின் குரலாய்.

## விலை என்ன?

புத்தாண்டின் புதிய காலைப் பொழுது
புதிய எண்ணிலிருந்து அழைப்பு
ஓடோடி வந்தேன் தோழியின்
வாழ்த்துச் செய்தியை கேட்க..
வந்து சேர்ந்தது வாழ்த்துச் செய்தியல்ல!
அழைப்பில் என் காதுகள் கேட்டது
என் வாழ்வை கேள்விக்குறியாக்கிய கேள்வி...
அதன் வலி நீங்கவில்லை...

அந்தக் குரல் நினைவிலிருந்து நீங்காமல்
ஒவ்வொரு கைபேசி ஒலிப்பிலும்
ஒலித்துக் கொண்டிருக்கிறது!

அந்த புத்தாண்டின் அதிகாலையில்
என் இதயத்தில் இடி இறக்கிய கேள்வி..
“ஒரு முறை உனைப் புணர்வதற்கு விலை என்ன?”
இணைப்பைத் துண்டித்தேன்..
இன்னொரு முறை அதே எண்ணிலிருந்து
அழைப்பு வந்து கொண்டே இருக்கு!
யாரிடம் சொல்வேன்?
அந்த அழைப்பு பற்றி..
அச்சம் உள்ளுக்குள் உயிர் குடிக்க..

எஸ்.எஸ்.எல்.சி. தேர்வுக்கு தயாராகும்
பள்ளி மாணவி நான்..

#இத்தகைய சம்பவங்களை ஒரு குழந்தையிடமிருந்து கேட்கும் போதெல்லாம் சங்க காலத்தைப் போல், மும்பை, கொல்கத்தா போன்ற நகரங்களில் இருப்பதைப் போல், டாஸ்மாக் கடைகளைப் போல் விலைமகன்களுக்கெனவும் விலை போக விரும்பும் மகளிருக்கெனவும் தனி பகுதிகளை உருவாக்க வேண்டும் போலிருக்கிறது. குறைந்தது இக்குழந்தைகளாவது நிம்மதியாய் வாழும் குழந்தைகளாக.

## என்னைப் போல் அவனும்!

உண்மையை மறைக்கச் சொல்லி
காலில் விழுந்து கெஞ்சுகிறாள் தாய்!
ஊரெல்லாம் ஏசும் என்று..
உன் வாழ்வு அழியும் என்று..
நம் குடும்ப மானம் போகும் என்று..
கதறி அழுகிறாள்!

கடைசியாய் தனக்கும் நிகழ்ந்திருக்கென்று..
ஆறுதல் சொல்ல முயல்கிறாள்!
அவளோடு சேர்ந்து அவளுக்காகவும்
எனக்காகவும் நானே அழுகிறேன்!
அத்தனை அறிவுரைகளையும்
தொடர்ந்து எனக்கே வழங்குது
எனது குடும்பம்..

அத்தனையும் தாண்டி
அஞ்சாமல் வெளிவந்து
குரல் எழுப்புகிறேன்..
அன்று வீட்டை விட்டு ஓடியவன் தான்
இதுவரை திரும்பவில்லை
என் அண்ணன் எங்கள் வீட்டுக்கு!

என்னைப் போல் அவனும்
எங்கோ அதே குற்ற உணர்வில்
சுற்றித் திரியக் கூடும்!

#உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் எழுதப்பட்டது. குடும்பத்தில் வன்புணர்வுக்கு ஆளாகும் குழந்தைகளின் எண்ணிக்கை எத்தனை என்று சரிவர கணக்குகள் இல்லை. அது அந்தந்த குழந்தைக்கும் குடும்பத்திற்கும் மட்டும் தெரிந்த இரகசியம். பெண் குழந்தைகள் மட்டுமல்ல ஆண் குழந்தைகளும் இத்தகைய பாதிப்புகளுக்கு உள்ளாகிறார்கள். மனித மிருகத்தைத் தவிர வேறு மிருகங்களில் இத்தகைய நிகழ்வுகள் நிகழ்கிறதா என்று அறிவியல் உலகிடம் தான் கேட்க வேண்டும்.

## என் பரம்பரை என்னோடு முடிகிறது!

எப்போதும் போல் நான் சிரித்திருக்க
மற்றவள் போல் அவள் அழுதிருந்தாள்!
நினைவு தெளிந்த நொடி முதல்
அவள் அழுதிருந்தாள்!

நான் நினைத்ததை சாதித்திருந்தேன்!
அவள் நினைத்துப் பார்க்கவும் விரும்பா
நிகழ்வொன்று நிகழ்ந்திருந்தது!
நான் நினைத்தபடி நிகழ்ந்திருந்தது!

அவள் கேட்டு வந்தது
மாதச் சம்பளத்திற்கொரு வேலை..
நான் கொடுத்தேன் ஊதியம்
அவளை வன்புணர்ந்து..

நினைவு தெளிந்தவள்..
பணத்தை வீசி எறிந்து விட்டு புறப்பட்டாள்..
"தேவைப் பட்டால் அழைக்கிறேன்"
நான் சொன்ன கடைசி வார்த்தை
அதுவென்றே என் நினைவு!

அவள் கதவைத் திறக்க
அவள் வயதொத்த என் மகள்
என் நெஞ்சில் பாய்ச்சுகிறாள்!
என் பரம்பரை குத்துவேல் ஒன்றை!

அவள் காலடியில் வீழ்கிறேன்!
அவள் கண்களில் நீர் இல்லை!
என் பரம்பரை என்னோடு முடிகிறது!

#ஊரில் பெரியவராகவோ, வசதி படைத்தவராகவோ இருப்பதால் மட்டுமே கேட்க நாதியற்று அவர்கள் செய்யும் அநீதிகளை அவர்கள் குடும்பத்துப் பெண்கள் ஆதரிக்கக் கூடாது. அப்படி ஆதரிக்காத ஒரு இளம்பெண் பாய்ச்சிய குத்துவேல் உங்கள் நெஞ்சிலும் பாய்ந்திருக்குமென்று நம்புகிறேன்.

## நான் யார் தெரியுமா?

நூற்றாண்டு
இருபத்தி ஒன்றென்றார்கள்!
அறிவியல் அகிலத்தை
ஆட்சி செய்கிறதென்றார்கள்!

ஆனாலும்
கருவறையிலும்..
வீட்டிலும்.. வீதியிலும்..
நாட்டிலும்..
நான் வாழும் பூமியிலும்..
எனக்கென பாதுகாப்பு..
அடிப்படை உரிமை கோரி
போராடும் நிலையை மட்டும்
அப்படியே வளர்த்தெடுத்தார்கள்!

அதுவே நீதியென நம்ப வைத்தார்கள்!
என்னையும் சொல்ல வைத்தார்கள்!
நான் யார் தெரியுமா?

#நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த நிலையோடு ஒப்பிட்டு ஒப்பிட்டு நாம் சம உரிமை அடைந்து விட்டோமென பறைசாற்றிக் கொள்ளும் சமூகத்தை நோக்கி.

# மீண்டும் ஒரு முறை

புதிதல்ல எனக்கு
கன்னத்தில் வழிந்தோடும் கண்ணீர்!

வறண்டிருந்தாலும்..
காலம் காலமாய்
அவை வழிந்தோடிய
நீர்த்தடம் நீ காணலாம்!

காரணம் நீ என்றா சொன்னேன்!
நீ உடன் இருக்கையிலே
அவற்றை தவிர்க்க இயலவில்லை
அப்படித் தானே சொன்னேன்!

புதிதல்ல எனக்கு
கன்னத்தில் வழிந்தோடும் கண்ணீர்!

இதோ...
உனக்காக மறைத்துக் கொள்கிறேன்!
கண்களுக்குள் புதைத்துக் கொள்கிறேன்!
ஒருமுறை உன் முகம் காட்டு!
உன் உருவத்தை உள்ளத்தில்
மறுமுறை நிறைத்துக் கொள்கிறேன்!

## எது குற்றம்?

இனிப்புகள் பிடிக்கும் எனக்கு..
அதில் அதிசயமில்லை!

அவர்கள் கொடுத்த இனிப்பில்
இன்னும் அதிகமான மயக்கம்..

அதை உண்டு விட்டால்
அகிலமெல்லாம் மறையும்..

மீண்டு நான் திரும்பினால்
உடலெல்லாம் வலிக்கும்..

ஊருக்கு சொல்லாத உறுப்பெல்லாம்
உருக்குலைந்து உடலெல்லாம் வலிக்கும்!

மறுமுறை இனிப்பை வாங்க மறுத்தேன்!
வலியை சொல்ல வழியின்று தவித்தேன்!

அந்நாள் முதல் உலகைவிட்டு - இன்னும்
இருந்த உறவை விட்டு விலகி நின்றேன்!

ஒற்றையாய் நான் மட்டும் நின்றேன்!
இனிப்புகளின்றி வேட்டையாட அது வழி செய்தது!

முதன் முதலாய் அக்காவிடம் சொன்னேன்! - அத்தகவல்
அம்மாவுக்கும் அங்கோர் காவல் துறைக்கும் போனது!

இனிப்பு வழங்கி இழி செயல் செய்தோர்
இனி சாகும் வரை தூக்கிலிட நீதி கிடைத்தது!

“நீதி கிடைத்தது” அந்த வார்த்தைகள் என் கனவில் நிகழ..
என் கதை முடித்து காத்தாடியில் தொங்குது என் உடல்!

இனிப்பு வழங்கியவர்கள் இப்போதும் இனிப்புடன்
என்னைப் போல் இன்னோர் ஊமையைத் தேடியபடி!

வாய் பேச இயலாமல் பிறந்தது குற்றமா?
பெண்ணாய் பிறந்தது குற்றமா?

எனக்குத் தான் பேச வராது..
வாய்பேச வசதியுல்லோரே சொல்லுங்கள்!

வாய் பேச இயலாமல் பிறந்தது குற்றமா?
பெண்ணாய் பிறந்தது குற்றமா?

#தங்களுக்கு நிகழ்வது இன்னவென்று அறிய இயலா.. வெளியே சொல்ல இயலாத குழந்தையை வன்புணரும் மனித குலத்தின் முன் வைக்கப்பட்ட தீர்வு இல்லா கேள்வி.

## நான் என்ன செய்வேன்?

அனைத்தையும் அனைவரையும்
விட்டு விலகி வந்து
மாதங்கள் பல கடந்தோடி விட்டன!
கைபேசி அனைவரின் எண்ணையும் இழந்து
தனிமையில் இருந்த காலம் அது!

கதிரவன் மறைந்த ஒரு மாலை நேரத்தில்
அழைப்பொன்றை ஏற்றுத் துடிக்குது
நீண்ட நாட்களுக்குப் பின் கைபேசி..
ஏற்றுப் பேச மனமில்லாமல் ஏற்கிறேன்!

ஏற்காமல் இருந்திருக்கலாம் என்றது
அந்த அழைப்பில் நிகழ்ந்த உரையாடல்..
நான் மூன்றாம் நபராய் இணைக்கப்பட்டிருக்கிறேன்!
எனக்கு மிகவும் பழக்கமான குரலில்
ஓங்கி குரலெடுத்து அழுதபடி எச்சரிக்கிறார் அவர்!

எதிர் முனையில் ஆண் குரல்
அந்தப் பெண்ணை வாழவிடமாட்டேன் என்று
அச்சுறுத்தி மிரட்டுகிறது!
அப்படி நிகழ்ந்தால் தன் உயிரை துறந்து
காரணகர்த்தாவான உன்னை தண்டனைக்குள்ளாக்குவேன்
தற்காப்பு மிரட்டலாய் அந்தப் பெண்ணின் குரல்!

நிகழ்வது ஏதும் தெரியாமல்..
இடையில் நான் கத்தியபடி இருக்கேன்!
ஆணின் குரல் அடையாளம் தெரியவில்லை..
எனக்கான பதிலின்றி என் இணைப்பு துண்டிக்கப்படுது!

பல முயற்சிகளுக்குப் பின்பும்
அந்தப் பெண்ணிடம் காரணம் கேட்க இயலாமலே!

கடைசியாய் கிடைத்த பதில்
அதைப் பற்றி பேச வேண்டாம்!

பேசாமல் பேசாமல் நீங்கள் காத்த அமைதி
நாட்டை நல் நிலைக்கு மாற்றவில்லை
அதை அவல நிலைக்கு இட்டுச் சென்றுள்ளது!
கேட்க எனக்கு உரிமையில்லை என்ற பின்னே
அந்தப் பெண்ணிடம் என்னவென்று கேட்பேன்?
ஏது என்று கேட்பேன்?

அந்தப் பெண் என் அக்காவோ..
என் அன்னையோ? என் தங்கையோ?
அது கடந்து இம்மண்ணில் இன்னொரு உயிர்
இருந்தும் என்ன பயன்?
உரிமை இல்லையென உரைத்த பின்னே
நான் என்ன செய்வேன்?

#உயிரை உறையச் செய்த உண்மைச் சம்பவம். மீளவே முடியாத ஒரு கொடும் நிகழ்வு. மீண்டும் அவர்களை சந்திக்கவும் இல்லை. அவர்கள் நிலையை அறியவும் இல்லை. அதற்கான வாய்ப்பும் இல்லை.

## எச்சில் இழை!

ஓடி ஓடி உழைத்து ஓய்ந்திருந்தாள்..
அப்பாடாவென அவள் அமர்ந்த நேரம்..
நான் நுழைந்தேன் அங்கே..
எச்சில் இழை எடுக்கும் வேலைக்காக..

கால் வலி பற்றி புலம்பிக் கொண்டிருந்தவள்..
என் கைக்கு குப்பைத் தொட்டி வந்த
அந்நொடியில் அதிர்ந்து போய் எழுந்தாள்..
எனது உரிமை என்று போராடினாள்..

எத்தனை மறுத்தும் குப்பைத் தொட்டியை
தன் வசம் செய்தாள் என்னிடமிருந்து!
தங்கை இருக்கையில் அண்ணன் எச்சிலிழை எடுப்பது
ஆகவே ஆகாது என கூச்சலிட்டாள்!

அவளுக்கு அதை சொன்னது
அவளது முன்னோர்கள் என்றாள்..
அதற்கு ஆதரவாய் கடந்த தலைமுறை தாயார்
தானே வந்து இணைந்து கொண்டார்!

அதற்கான காரணங்களை இருவருமே சொல்லவில்லை
என் கைக்கு அந்த குப்பைத் தொட்டி
கடைசி வரை திரும்பவுமில்லை!
சமூகத் தொட்டியில் குப்பையாய்
நான் அங்கு தூக்கி எறியப்பட்டிருந்தேன்!

ஆணுக்கொரு நீதி..
பெண்ணுக்கொரு நீதி..
எங்க ஊருல எல்லாமே தெளிவா...
குழப்பமாய் இருக்கும் எங்க ஊருல!

# நடு நிலையாய் இசைப்புயல் #MeToo

தம்பி பேச காத்திருந்தான்..
அக்கா பேசிய பின்பு பேச
தம்பி, தான் பேச காத்திருந்தான்!

நடுநிலையாய் ஓர் கருத்தை
தன் விருப்பத்தை, இச்சமூகத்தை நோக்கி
தன் விருப்பத்தையும் சேர்த்தே
சமூகத்திடம் சொல்லி வைத்தான்!

அவன் குரல் அகிலமெல்லாம்
கேட்குமென்றே..
தம்பிக்கு முன்னே அக்கா
தன் தம்பிக்கு முன்னே அக்கா
பெண்களுக்காக குரல் கொடுத்தாள்!

அத்தனையும் செவிவழிச் செய்தி என்றே
சொல்லிச் சொல்லி மீ டூ இயக்கத்திற்கு
தங்கள் ஆதரவைத் தெரிவித்து
தத்தம் கடமை முடித்துள்ளார்கள்!

குற்றஞ் சுமத்திய சகோதரிகள்
தம் பக்கமுள்ள நியாயம் சொல்ல
சாட்சி இல்லா தருணத்தில்
தம் மனமே சாட்சியாய்
அகிலத்திற்கு உண்மை உரைப்பாரோ?

தமிழ் அழகாய் பாடிய கவியோ..
தன் நிலை விளக்க - தன்
தமிழைத் துணைக்கு அழைப்பானோ?
அவன் நிலை விளக்க..
தமிழ்த் தாய் தன் வாய் திறப்பாளோ?
உண்மை உலகறியச் செய்வாளோ?

#திரைத்துறையில் பெண்களுக்கு நடைபெறும் கொடுமைகளுக்கு மட்டும் ஊடகங்களால் மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதோ?

குற்றம் சாட்டப் பட்டோர் பலர்
பெயர் கூட வெளியில் தெரியாமல் உலவ
மீண்டும் மீண்டும் வெளிச்சம் போடுகிறார்களோ?
திரையில் மட்டும் பணம் கொட்டுமென்று!

# இனிமையாய் வாழ்ந்திடுமோ?

அச்சம் என் அங்கமெல்லாம்
அனுதினமும் பரவிக் கிடக்கும்!
நான் இருப்பதோ பாரத நாடு!
பாருக்குள்ளே இது பண்பான நாடு!

நடுநிசி ஏன்?
நடுப்பகலிலும் - நான்
நடுங்கிக் கொண்டுதான் பயணிப்பேன்!
நல்பண்பு அதுவென்றே அனுதினமும்
பாடங்கள் எனக்கு மட்டும் எடுக்கப்படும்!

எதற்குப் பயம்?
ஏன் பயம்?
யாருக்குப் பயம்?
யார் சொல்லித் தந்த பயம்?
எப்போது சொல்லித் தந்த பயம்?
எப்போது தீருமிந்த பயம்?
எதுவும் தெரியாமலே என் பயணம்!

இருப்பதோ.. முப்பாலினம்..
அதில் இரு பாலினம்..
அடிமையாய்.. அகதியாய்..
அஞ்சியே வாழ்ந்திட..
மீதமுள்ள ஒற்றைப் பாலினம்
தனித்து இன்பமாய் இம்மண்ணில்
வாழ்ந்திடுமோ தொடர்ந்து?

## அண்ணனில்லா தங்கையொருத்தி

ஓர் தாய் வயிற்றில் பிறக்கவில்லை!
ஓர் இருபது ஆண்டுகள் கழித்து தான்
ஒரு மாலை வேளையில் அறிமுகமனாள்!
அதுவும் வேலை தேடும் வேலை நிமித்தமாக!

அன்றைய கலந்துரையாடலோடு..
அனுபவப் பகிர்வோடு..
அதன் பின்னே
வேலை கிடைத்த செய்தியோடு..
அவளுடனான சந்திப்பு
அங்கொன்றும் இங்கொன்றுமாய் நிகழும்!

இடையில் மூவைந்து ஆண்டுகள்
ஓடோடிக் கடந்து விட்டன..
பெரிய மனுசியான தன் மகளுக்கு
ஆசி கேட்டு மின்னஞ்சல் அனுப்புகிறாள்!

ஓர் வயிற்றில் பிறக்காமல் போனாலும்
விடும் மூச்செல்லாம் அண்ணனென்று
அவள் விடும் மூச்செல்லாம்
எனக்கு ஒரு பெருமிடம் கொடுப்பாள்!
அண்ணன் என்று சொல்லி
அவளுக்கென நான் ஒன்றும் கொடாத போதும்!

#உடன் பிறந்த சகோதரன் இல்லாத பெண்களின் நிலையும் உடன் பிறவா சகோதரிகளை பெற்ற சகோதரன்களின் நிலையும் இப்பூமியில் இவ்வாறு தானோ? என எண்ணச் செய்த பல நிகழ்வுகள் உண்டு. அதில் ஒன்று இது.

## குடிமகள் நான்!

குடித்து குடி கெடுக்கும் கணவன்..
குடியைத் தொழிலென நடத்தும்
குடியரசு நாட்டில்
குடித்து குடி கெடுக்கும் கணவன்!

குத்த வைக்கவும் இடமின்றி
வீதியில் குழந்தையோடு நான்!
கூலிக்கு போகுமிடமெல்லாம்
கூசாமல் கை நீட்டும் கூட்டம்!

மத்தியில் மானம் காத்து
குழந்தைகள் பசியை நீக்கி
குடி கெடுக்கும் கணவனின்
அடி உதைகளில் பிழைத்து

தேம்பித் தேம்பி அழுதே
தீராத என் சோகத்தை
சொல்லவும் நாதி இன்றி..
தேம்பித் தேம்பி அழுதே!
என் கண்ணீர் வற்றியாச்சு!

என்னுடல் மணல் திருடிய
ஜீவனிழந்த நதி ஆகிப் போச்சு!
என் வாழ்க்கை எனக்குள்ளே
யாருக்கும் தெரியாமல்
இதோ மண்ணோடு மண்ணாக
புதைஞ்சு போச்சு!

#தமிழகத்தில் அரசால் நடத்தப்படும் டாஸ்மாக் அதிக எண்ணிக்கையில் திறந்த பிறகு குடிப்பழக்கத்திற்கு ஆளாகிய பல ஆண்களால் அவர்கள் குடும்பத்திற்கு ஏற்படும் துன்பம், அதனால் பாதிக்கப்பட்ட பெண்களின் நிலையைச் சொல்லும் இந்த வார்த்தைக் கோர்வை. அப்படியே மணல் திருட்டைப் பற்றியும் ஒரு வார்த்தை சொல்லியாச்சு..

## நான் என்பதால்!

மிக நீண்ட போராட்டத்திற்குப் பின்
என் தாய் முதன் முதலாய்
பள்ளிகள் சென்றாள் படிக்க!

தொடர் போராட்டத்திற்குப் பின்
நான் பள்ளிகள் படித்து
கல்லூரிகள் சென்றேன் படிக்க!

இடைவிடா போராட்டத்திற்குப் பின்
நான் கல்லூரிகள் முடித்து
பணிக்குச் சென்றேன் உழைக்க!

போராட்டங்கள் உடல் ரீதியாகவும்
உள்ளம் ரீதியாகவும்
இடைவிடாது தொடருது..
நான் ஒரு பெண் என்பதால்!

#பெண் கல்வியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களும் தொடரும் போராட்டங்களும்

## ஒற்றை மனிதன் அவன்

இருக்கும் ஒரே நல்லுறவென்று
அவனை நம்பி இருந்தேன்!
அவனும் விலகிச் செல்கிறான்!
அவன் சொல்லும் காரணங்கள்
ஏதும் எனக்கு விளங்காமலே
வார்த்தைகளின்றி தலையசைத்து
கடைசி உரையாடலை தொடர்கிறேன்!

அவன் ஒற்றை மனிதன்..
அவன் தனிமை விரும்பி..
தனக்கான தனிமையை தானே
தேடித் தேடி பெற்றுக் கொள்கிறான்!
இருந்த கொஞ்ச நம்பிக்கையும்
மொத்தமாய் கையகப்படுத்தி செல்கிறான்!

அவனுக்காக முதன் முதலாய்
அவனே கேட்கிறான்..
கொடுக்க முடியாது தான்..
கொடுக்க விரும்பவில்லை தான்!
இருந்தும் கொடுத்து விட்டுத் திரும்பிகிறேன்
அவனுடனான உறவை கொடுத்துவிட்டு
பிரிவோடு திரும்புகிறேன்!

#ஆணுக்காக, ஆணின் வேண்டுகோளுக்காக, அவர்களின் நன்மைக்காக விட்டு விலகிச் சென்று தனித்திருக்கும் பெண்களும் இந்தப் பூமியில் உலவிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

## அவனை இழந்து நிற்கிறேன்!

எந்தப் பிரச்சனை என்றாலும்
“எங்கோ எனக்காக அவன் இருக்கிறான்”
அந்த நம்பிக்கையை
அவன் விதைத்தானோ?
அவன் செயல்கள் விதைத்ததோ?
நான் என்னுள் விதைத்தேனோ?
அந்தக் கேள்விக்கு விடை தெரியுமுன்னே!

அவனே வந்து வழியச் சொல்கிறான்
இதுவே கடைசி சந்திப்பென்று!
இதுவே கடைசி உரையாடலென்று!
தடுத்து நிறுத்தவோ..
மறித்துக் கேட்கவோ..
உரிமையின்றி வார்த்தையின்றி..
அவனை இழந்து நிற்கிறேன்!

#தன் வாழ்வில் நம்பிக்கை போலிருந்த ஒரு ஆண் உறவை இழந்து நிற்கும் ஒரு பெண்ணின் குரல்

## என் ஊரில்

அவள் மானம் பறிக்கப்பட்டு
அவள் அங்கமெல்லாம்
அசிங்கப்படுத்தப்பட்டு..
அருவருப்பாக துன்புறுத்தப்பட்டு
ஊசிகளால் குத்தப்பட்டு
தற்கொலையாய் ஜோடிக்கப்பட்டு
அவனே காவலுக்கும் தூது கொடுத்து
ஊருக்குள் சுற்றித் திரிகிறான்!

சுற்றத்து வீட்டார் பார்க்கவுமில்லை
ஒன்றையும் கேட்கவுமில்லை
ஓயாது சாட்சி சொல்கிறார்கள்!
போலீசுக்கும் இதர செலவும்
அறுபது இலட்சமென்கிறார்கள்!
கைது செய்ய தேடுவதாய்
தேடிக் கொண்டே இருக்கிறது காவல்!

அந்தக் குழந்தையை வன்புணர்ந்து கொன்றவன்
அதே ஊரில் போலீசோடு தேடிக் கொண்டிருக்கான்!
மருத்துவமனைகள் தற்கொலையென
சான்றுகள் கொடுத்து..
அக்குழந்தையை மறுபடியும் மறுபடியும்
மானபங்கப்படுத்துகிறது!

எதிர்த்து குரல் எழுப்பிய
அப்பனும் ஆத்தாளும் குரல் இன்றி
கூண்டு வீட்டுக்குள்ளே கிடக்கிறார்கள்!
களமாடிய இயக்கங்கள்
கட்டுக் கட்டாய் நோட்டுகளுடன்
அடுத்த கட்ட போராட்டங்களுக்கு
தத்தம் தயாரிப்பு வேலைகளில்!

அக்குழந்தை யாரை மன்னிக்கும்?
தன்னை வன்புணர்ந்து உடலை சிதைத்து
சித்ரவதைகள் செய்து
தூக்காக ஜோடித்தவனயாய்..

அவனை பணம் கொடுத்து காக்கும்
அவன் தகப்பனையா? குடும்பத்தையா?
பணம் பெற்று அதற்கு காவல் நிற்கும்
நாய்களையா?
அந்நாய்களை வைத்து
எதிர்ப்புக் குரலை ஒடுக்கும்
சமூகக் கூட்டத்தையா?

பைகளை நிறைத்து பொய்யாய்
சான்றிதழ் வழங்கும் மருத்துவனையா?
ஒரு வயிற்றுச் சோற்றுக்கும் வழியின்றி
ஓரிரு நாள் தனக்காக போராடி
தினக்கூலிக்கு ஓடும் மக்களையா?

நீதி வாங்கித் தருகிறேன் என்பவனையும்
ஒதுக்கித் தள்ளி அமைதியாகிப் போன
தன் அப்பனையும் ஆத்தாளையுமா?

“பேட்டி பச்சாவ்” எனும் பாரத மண்ணில்
பெண்ணாய் பிறந்ததற்காக தன்னையேவா?
யாரை மன்னிக்கும் அந்த பத்து வயதை கடந்த
பெண் குழந்தை!

#தேனி மாவட்டத்தில் நிகழ்ந்த ஒரு உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் எழுதப்பட்டது. அந்த சிறுமியின் கால்களில் காம்பாஸ் கருவியால் குத்தி ஏற்படுத்தப்பட்டிருந்த துளைகள் என் கண்ணை விட்டு நீங்கவும் இல்லை. என் இதயத்தை குத்திக் கிழிப்பதை நிறுத்தவும் இல்லை.

## என் அன்னாய்!

கற்றறிய வழி இருந்தும்
கற்றறியாமல் மூடனாய்..
காலம் காலமாய் அடிமையாய்
கழித்து விட்டு வாழ்வை!

களிப்பில்லை என்று நிதம்
கதறிக் கதறி அழும்
கயவர்கள் முன் நான்..
காதிருந்தும் செவிடனாய்
கதைக்கும் திறனிருந்தும் ஊமையாய்
கண்ணிருந்தும் குருடனாய்
கயவருள் கயவனாய்..
காலம் கடத்தவோ
கருவில் எனைச் சுமந்து
கருத்தாய் பெற்றெடுத்தாயோ?
கருணை நிறை என் அன்னாய்!

#களமாடத் துவங்கு முன்னே மட்டுப்படுத்தி சுயநலமாக்கும் அனைத்து அன்னைகளையும் நோக்கி வைக்கப்பட்ட ஒரு பிள்ளையின் குரலாய்.

## நான் கேட்டு நிற்கிறேன்

இருப்பதோ இருவர்!
இதில் ஒருவர் எப்படி ஆனார்?
இன்னொருவருக்குத் தாழ்ந்தோர்!

இதற்கு பதிலேதுமின்றி
அனுதினமும் போராடுகிறேன்!
திரும்பத் திரும்ப
அவர்களிடமே கேட்டு நிற்கிறேன்!
அவர் மறுக்கும் எனது உரிமையை
அவர்களிடமே கேட்டு நிற்கிறேன்!

#பெண்களின் உரிமைப் போராட்டம்

# நம்பி இருக்கிறேன்!

நம்பி இரு.. நானிருக்கிறேன்!
அதுவே அவனது கடைசி வார்த்தைகள்!
அதன் பின் காணவில்லை
ஒரு நாளும் அவனை!

ஆனாலும் நம்பி இருக்கிறேன்!
அவன் இருக்கிறானென்று!
அவன் இருக்கிறானா? என்ற
கேள்வி எப்போதும் எழாமல்!

# அவளின் ஒப்புதல்

அவள் வெற்றிகளுக்கு வாழ்த்துகள்
சொல்லி முடித்த மறுகணமே!
சமூகமெங்கும் அவள்களுக்கு நடக்கும்
அநீதிகளைப் பற்றிய பேச்சு துவங்கியாச்சு!

ஆணாய் பிறந்து விட்டதால்
அவள்களையோ.. அவர்தம் நிலையையோ
அப்படியே சொல்லிவிட இயலாது!
ஆகையால் தான் இம்முயற்சி!

“மீ டூ” வை அப்படியே கடந்து செல்வதாய்
அவள் சொன்னது ஆச்சர்யமென்றால்..
அத்தகைய நிகழ்வுகள் அனைவருக்கும் தான்
அனுதினமும் தான் நிகழ்கிறது என்று
என் நெஞ்சுக்கு அதிர்ச்சியை பரிசளித்தாள்!

அநீதிகளுக்கு நீதிகள் கிடைக்காத போது..
அச்சமூகம் நம்பிக்கை இழந்து
அநீதிகளை நீதிகளாக சகித்துக் கொள்ள
அதனை தயார் படுத்திக் கொள்கிறது போலும்!

சில பல நிகழ்வுகள் தகவல்கள் பற்றிச் சொல்லி
இணைப்பைத் துண்டித்தேன்!
இருட்டடிப்பு செய்யப்படுவது பெண்கள் மட்டுமல்ல
அவர்கள் மீதான வன்முறைகளும் தான்!

உடனே தூங்குவது கடினம்..
அவள் தன் அனுபவத்தை தானே
எழுத ஒப்புக் கொண்டதைத் தவிர
வேறு ஏதும் காரணமில்லை
மனதை அமைதி செய்ய..

# அமைதியாய் உறங்குகிறாள்!

என் வாழ்நாள் முழுவதும்
என் அமைதி காக்க..
தன் அமைதி இழந்து
அதுவே தனக்குப் பிடித்த வாழ்வென
பரப்புரைகள் செய்து..
என்னையும் நம்ப வைத்து
அமைதியற்ற வாழ்வை முடித்து
அமைதியாய் உறங்குகிறாள்!

எழுப்ப இயலா உறக்கம் அது!
கலைக்க முடியா உறக்கம் அது!
அவளே விரும்பி நினைத்தாலும்
எழும்ப இயலா உறக்கம் அது!
அவளோடு என் அமைதியும் உறங்குது!
அவள் என் தாய்..
நான் அவள் பாதுகாத்த வாழ்வு!
என் ஜீவன் அவள் பிரிந்த பின்னே..
இனி என்ன ஆகுமோ?
அவள் தந்த வாழ்வும் அமைதியும்!

## காதல் – கல்யாணம்

ஒரு அழைப்பல்ல..
ஒவ்வொரு அழைப்பிலும்..
நான் அவனுக்காக அனுதாபப் பட்டேன்!
உண்மையில் எனக்காக
என் குடும்பத்திற்காக அனுதாபப் பட்டேன்!

உறவுகளும் வீடுகளும் மெல்ல நீங்கின
என் நினைவெல்லாம் அவன்
இடம் பிடித்துக் கொண்டான்!

அதன் பின் யாருக்கும் சொல்லாத
என் தனிமையும் முதிர்ந்து கொண்டிருந்த
என் இளமையும்.. முடிவே ஆகா
தொடர் பெண் பார்க்கும் படலமும் இருந்தது!

அத்தனையும் தாண்டி எனக்குப் பின்னே
என் திருமணம் முடிய காத்திருக்கும்
என்னருமை தங்கைகளின் காத்திருப்புமிருந்தது!

கைபேசி அழைப்பில் காதல் வயப்பட்டு நிற்பது
உண்மையில் காதல் வரைமுறைக்குள்
எப்போதும் வந்து சேராது தான்!

காதலுக்கு மட்டுமல்ல வையகத்தில் நிகழும்
எதற்கும் வரைமுறை இருப்பதாய்
எனக்குத் தோன்றவே இல்லை!

அட! என்ன நான் செய்கிறேன்?
என் குடும்ப மானம் எங்கு போகும்?
முகம் பார்க்கா ஒருவனுக்காக
அத்தனையும் ஒதுக்கித் தள்ளுவேனோ?
அய்யகோ! நினைத்தாலே நெஞ்சம்
பதைபதைத்து அடங்க மறுக்கிறது!

வேலை இல்லாமல் வருபவனும்
வீடு இல்லாமல் வருபவனும்
வரதட்சணைக்காக மட்டும் வருபவனும்
இவ்வாறு தொடர்ந்து புறக்கணிக்கப்பட்ட
எனக்கு என்ன குறை?

கை நிறைய சம்பாதிக்கும் அரசு உத்தியோகம்
கடன் இல்லா வாழ்க்கை முறை
தேவைகளை பூர்த்தி செய்து கொள்ளும்
நிலையான வருமானமும் சுற்றமும்
பேரழகி இல்லை என்றாலும்
குறை சொல்ல முடியா அழகுதான்!

எத்தனை இருந்தும் நிகழாமல் தள்ளிப் போகும்
திருமணம் தள்ளி இருக்குமோ?
காதலுக்குள் என்னை? - இது காதலோ?
அது கிடக்கட்டும்..

குழப்பத்தின் மத்தியில் நின்று
குடும்பத்திடம் இந்நிகழ்வைச் சொல்ல
எனக்குள் இல்லாத தைரியத்தை
தேற்றித் தேற்றி வரவழைத்து சொல்கிறேன்!

சொன்ன மறுநொடியில் நிற்கிறேன்
நான் மட்டும் குற்றவாளிக் கூண்டில்!
காதல் குற்றமா? - இது காதலுமில்லை
இருந்தாலும் இதுவும் குற்றம்!
குடும்பத்தாரின் குரல் எனக்கெதிராய்..

கைபேசியில் பேசியவனிடம் பேசுகிறார்கள்
அந்தக் குறுகிய கால காதல்
ஓரிரு தினங்களில் முடித்து வைக்கப்படுது
முகம் பார்க்காமல் புகைப்படமும் பார்க்காமல்
முடிவு செய்யப்பட்ட இன்னொருவனுடன்
திருமண நிச்சயதார்த்தம் மூலம்!

நேர காலம் சரியில்லை என்றார்கள்..
முன்னே நிகந்த நிகழ்வுகளுக்கு!
இப்போதுதான் கல்யாண நேரம்
கைகூடி வந்திருக்கு என்றார்கள்
பிந்தைய நிகழ்வுகளுக்கு!
அத்தனையும் விதி என்றார்கள்!
குற்ற உணர்வால் என்னை
என் உரிமையும் கோர விடாமல்
தாலி கட்ட தலைகுனிய வைத்தார்கள்!

அத்தனைக்கும் முன்னே
சாதிப் பிரிவுகளும்
சாதிக்குள் கிளைப்பிரிவுகளும்
சரிபார்க்கப் பட்டு..
நானும் அவனும் ஒரு முறையும் பார்க்காமலே
திருமண மண்டபங்களும் பதிவு செய்யப்பட்டன!

முன்னவை அத்தனையும் மறந்து
பின்னவை அத்தனையும் ஏற்று
புது வாழ்வை துவங்க
முயற்சிகள் எடுத்தபடி நானிருக்கேன்!
சாதிப் பொருத்தத்தை சரிபார்த்த பின்னே
அத்தனை பொருத்தங்களும் சரியாய் இருப்பதாய்
அவர்கள் கொக்கரிக்கிறார்கள்!

அத்தனை புறக்கணிப்புகளையும் தாண்டி
அத்தனை அவமானங்களையும் தாங்கி
நானும் அந்தக் கொக்கரிப்புகளுக்கு
குரல் கொடுக்க வெளி வருகிறேன்!
அதுதான் வாழ்வென்கிறார்கள் நம்மவர்கள்!

#வரதட்சணை, சாதி, பணம், உடலழகு, சாதகம் என காலம் தாழ்த்தப்படும் திருமணம். முதிர் கன்னிகளின் வாழ்வை திசை திருப்பும் நிகழ்வுகள். நான் இங்கு சொல்லாமல் விட்ட நிகழ்வுகள் பல உங்கள் வாழ்வில் நிகழ்ந்து கொண்டே இருக்கும்.

# உண்மை அறிந்திடடி

வாழ்க்கை ஒரு கண்ணாமூச்சி ஆட்டமடி
கண் விழித்தாலும் காட்சிகள் இல்லையடி
கைகள் வீசியே தேடல் தொடருமடி
தொட்ட பகுதியே கைகள் தொட்ட பகுதியே
வாழ்க்கை என்று நாளும் விளக்கமடி!
ஏற்க மறுத்தாலும் உனக்கும் எனக்கும்
தினமும் அதுவே திண்ணமான நிலையடி!

## வா தோழி வா!

மக்களெல்லாம் மாக்களாய்
மண்ணிலே மண்டியிட்டு
அடிமையாய் வாழவோ?
உதிரங்கள் சிந்திப் பெற்றோம்
பரங்கியனிடமிருந்து சுதந்திரம்!

நமக்கென சொல்லிச் சொல்லி
நம்மை மாற்றானுக்கு அடிமையாய்
நாளும் நடத்துபவர் நம்மவராவாரோ?
நம்பி நாம் உழைக்கும் உழைப்பு
நமக்கு பலனின்றி போவதும் நியாயமோ?

கேள்விகள் கேட்க வா தோழி!
கேள்விகள் கேட்டு வா தோழி!!
கேட்க நாதியின்றி நம் தாயின் தரம்..
கேலிக்கூத்தாகிக் கிடக்குது தரணியிலே!
கேள்விகள் கேட்க வா தோழி!
கேள்விகள் கேட்டு வா தோழி!

# எல்லாம் என் பொறுப்பு

நீங்கி நான் போக
நீ விரும்புவாயோ?
விலகி நான் செல்ல
நீ விரும்புவாயோ?

நிகழாது.. இது நிகழாது
நிகழ்த்த நீ விரும்புவாயோ?
நிச்சயம் அப்பொறுப்பும்
நீ விரும்பாவிடினும் என்னிடமே!

நிகழ்த்தி விட்டு நான்.
நீ விரும்பா நிகழ்வுகளை
நிகழ்த்தி விட்டு நான்
நிமிடங்களை கழிக்கிறேன்!
நினைவுகளை மட்டும் சுமந்து!

#முற்றிலும் புரியா நிகழ்வுகளை நிகழ்த்தி விடும் பெண்களுக்காக

## எதைத் தேர்ந்தெடுக்க?

அருகிலிருப்பது ஆபத்து தான் - நீ
என்னருகிலிருப்பது ஆபத்து தான்!
விலகியிருப்பது பேராபத்து தான் - நீ
என்னிலிருந்து விலகியிப்பது பேராபத்து தான்!
அருகிலிருப்பாயோ? விலகியிருப்பாயோ?
எதை நீ தேர்ந்தெடுப்பாயோ?

ஆபத்தா? பேராபத்தா?
நான் எதைத் தேர்ந்தெடுப்பேனோ?

# அது எதுவோ?

புரியாத மொழியில்
அவள் மட்டும் பாடுகிறாள்!
புரியாத இராகத்தில்
அவள் மட்டும் பாடுகிறாள்!
அரங்கமெல்லாம் அவளோடு
அடங்காமல் ஆடுகிறது!
அனைவரையும் ஆட்டுவிப்பது
அது எதுவோ?

#இசை மூலம் அனைவரையும் ஆட்டுவிக்கும் ஒரு பாடகிக்காக

## இயற்கை மருத்துவச்சி

காண்போரெல்லாம் கவர்ந்திழுக்கும்
கள்ளங்கபடமில்லா சிரிப்புக்காரி!
உரிமையில்லாமலும் உயிர் போல
உறவாகிவிடும் சொந்தக்காரி!

பாரபட்சமின்றி பார்ப்போரிடமெல்லாம்
பாசங்கொள்ளும் பாசக்காரி!
நேசமில்லாதோரும் நெகிழ்ந்துவிடும்
நெஞ்சத்திற்குச் சொந்தக்காரி!

அந்நியமின்றி அனிச்சை செயலாய்
அன்பு செய்யும் அன்புக்காரி!
மருந்துகள் தீர்க்காத நோய்களையும் தீர்க்கும்
மந்திரப்புன்னகைக்கு சொந்தக்காரி!

ஒலியில்லாமல் பல்மொழி பேசும்
கயல்விழிகளுக்கு சொந்தக்காரி!
அகத்து சிந்தையை அங்கமெல்லாம் அபிநயம்
பிடிக்கும் கலைக்குச் சொந்தக்காரி!

இயற்கை இயற்கையாய் நமக்களித்த
இயல்பான இயற்கை மருத்துவச்சி இவள்!

#மருத்துவத் துறையில் பெரும் பங்களிப்பைச் செய்யும் பெண்களுக்காக. இந்த வரிகள் நான் சந்தித்த ஒரு இயற்கை மருத்துவச்சி அவர்களுக்காக எழுதியது.

## அவளுக்கு விடுதலை கிட்டுமோ?

பெண்மையின் விடுதலை வேண்டி
பெண்மையின் அடிமை நிலை சாடி
பல லட்சம் பேர் பார்க்க கேட்க
பொலிவான குரலெழுப்பி ஒருத்தி
அனைவரையும் மயக்கியபடி
மேடை மேல் பாடுகிறாள்!

அவள் வார்த்தைகள் சேருமுன்னே
அனைவரின் நெஞ்சைச் சேருமுன்னே
அவள் ஆடையில்லா அங்கம்
அனைத்து நெஞ்சிலும் பதிந்திருக்கு!

ஒளி வெல்லுமோ?
ஒலி வெல்லுமோ?
அவள் சாடல் வார்த்தைகள்
அவர்கள் நெஞ்சை எட்டுமா?
அவளுக்கு விடுதலை கிட்டுமோ?

#பெண்ணடிமைக்காக குரலெழுப்பி பாடும் பாடகி ஒருத்தியின் நிலை

## வருவாயோ?

ஏமாற்றி உன்னோடு நானிருந்த நாழிகைகள்
அத்தனையும் என்னையும் ஏமாற்றிப் போனதடா!
நீ இல்லா நொடிகள் நகராமல் நரகமாகுதடா!
மறுமுறை உன்னைக் காண நெஞ்சம் ஏங்குதடா!
இருக்குமிடம் அறிந்தால் இக்கணமே வருவேனடா!
இடமறியாமல் இருக்குமிடமெல்லாம் தேடுகிறேனடா!
மன்னித்து மறுமுறை கண்முன் வருவாயோடா?

## அவளோடு

எதிலிருந்து மீட்க
அவள் முயல்கிறாளோ?
அதனாலேயே அவள்
என்னிலிருந்து தூரமாகிறாள்!

அவள் முயற்சிகள்
அனுதினம் தோற்கின்றன!
அதற்கோ இந்தப் பயணம்?
அவள் பாவம் தான்!
அதே நிலை தான் எனக்கும்!

யார் கொண்டு வந்து சேர்ப்பது?
அவளையும் என்னையும்
மீண்டும் மீண்டும் அதே சூழலில்!

அவள் உலகம் வேறு
என் உலகம் வேறு
இருவரும் சந்திக்கும் நேரங்களில்
பிறக்கும் உலகம் வேறு!

அங்கு நிறைந்திருப்பதெல்லாம்
துன்பமும் கண்ணீரும்!
கவலையும் ஏக்கமும்!
இருவருக்கும் இல்லை
இதுவரை விடுதலை!
அது கிட்டும் வரை
காத்திருக்க மனமுமில்லை!

## நான் யார்?

அவள் அமைதியை
நான் எப்படி கலைப்பது?
அவள் உரிமையை
நான் எப்படி மீட்பது?
நான் யார் அவளுக்கு?

## இதுவே என் நிலை!

நூறு பத்துகள் அனுப்பி இருக்கிறாள்
ஒரு பத்துமில்லா எனக்காக
ஒரு பந்தமுமில்லை என்றவனுக்காக!
நூறு பத்துகள் அனுப்பி இருக்கிறாள்!

ஏற்கவும் முடியாது!
மறுக்கவும் முடியாது!

ஏற்க முடியாது
அவள் நிலை அறிந்ததால்!
மறுக்க முடியாது
அந்த உரிமை எனக்கில்லாததால்!

#வாழ்வின் மிகவும் இக்கட்டான சூழலில் இருக்கும் சகோதரி ஒருவர் *"நிலவும் நீயும் நானும் தொகுப்பு 3"* புத்தகத்திற்காக ரூ 100 அனுப்பி இருந்தார். அதற்காக படைக்கப்பட்ட வரிகள்.

## படைப்பாளனின் படைப்பாளினி

படைத்து விட்டு
படைப்பு எப்படி என்பான்?
என்னைத் தவிர
எவரிடமும் அந்தக் கேள்வி
அவன் கேட்பதுமில்லை!
அந்த கேள்விக்குப் பதில் சொல்ல
ஒரு நாளும் எனக்குத் தெரிவதுமில்லை!

அவன் படைப்புகள் என்னை வந்து
சேர்வதும் இல்லை!
இப்போது என்னிடம் அவன் கேள்விகள்
கேட்பதுமில்லை!

உரிமை இழந்து
படைப்பு இழந்து
மண்ணில் என்ன வாழ்வோ?
இந்த வாழ்வு!

#ஒரு படைப்பாளனை இழந்த இன்னொரு படைப்பாளினியின் குரலாய். படைப்பாளிகள் சேர்ந்து இருப்பது இயலாத காரியம் போல் தோன்றுகிறது?

## ஏழு நாள் இலக்கியா

அது மதிய உணவுக்காக
சிறு குடல் பெருங்குடலுடன்
இடைவிடாது சண்டையிட்ட நேரம்..

இரண்டு நாட்களில் இதுவரை
இரண்டு முறைக்கு மேல்
அவளை சந்தித்து விட்டேன்!

ஆனாலும் இல்லை என்
நினைவுகளில் அவள் பெயர்!
அவளை சந்திக்கும் நொடிகளில்
அவளை பற்றி யாரேனும் பேசும்
அந்த நொடிகளில் எல்லாம்
அது மீண்டும் மீண்டும்
உறுதி செய்யப்படும்!

“சைவ மதிய உணவு”
உங்களுக்கு தயாரென சொன்னவள்..
உணவு கிடைக்குமிடத்தையும் சொன்னாள்!
அவள் பெயர் போல்
அதுவும் என் மூளையிலிருந்து
நழுவிப் போனது!

அவளைப் பின் தொடர்வதாய்
சொல்லிக் கொண்டே
அவள் சென்ற திசையையும்
அவளையும் தொலைத்து நின்றேன்!

அவள் தான் நேற்று
மதிய உணவில் நிகழ்ந்த
நிகழ்வை அவள் தாய்க்கு
செய்தியாக்கி இருக்கிறாள்!
அதுவும் நான் அறிந்தது
நேற்று இரவு உணவு
நேரத்தில் தான்!

அவளை அவள் தாய்
அறிமுகம் செய்திருந்தாள்!
பெயருடன் தான்..
என்னிடம் பெயர் சொல்லி
பயன் என்ன?
பெயர்கள் தொலைப்பதில்
நான் வல்லவன்!
என்னிடம் பெயர் சொல்லி
பயன் என்ன?

அவளைத் தொலைத்து
கூட்டத்தில் தொலைந்த
குழந்தையென விழித்திருந்தேன்!
உண்மையில் கூட்டத்தில்
தொலைந்து தான் இருந்தேன்!
கூட்டம் மாணவர் கூட்டம்!

பழைய நினைவுப் பேழையை
தூசி தட்டி எழுப்பி..
முன்பு ஒரு முறை
அவள் தாயை சந்தித்த
இடம் நோக்கி நகர்ந்தேன்!

உணவளிப்பவன் கடவுள்
உணர்வறிந்து உணவளிப்பவன்
உலகின் கடவுள்!

அவள் கடவுளில்லை
அது என் அறிவுக்கெட்டிய வரை!
ஆனாலும் அவள் தாய் சொன்னது
அவள் கடவுள் தான் அவள் தாய்க்கு!

அகண்ட கண்ணை இன்னும்
அகலத் திறந்து என்னைக் கண்டு பிடித்தாள்!
அவள் கருணையால் அக்கணம் முதல்
அவளும் மண்ணுலகக் குட்டி தேவதை தான்!

அவளோடு அவள் அக்காவும்
அவள் தாயும் இணைந்து கொண்டனர்!
கருணை கொண்டவர்கள்
கடவுளை தன்னிடம் கொண்டவர்களாகிறார்கள்!
கருணை ஆனவர்கள் கடவுளாகிறார்கள்!

மூன்று தேவதைகளுடன்
முக்காலமும் அறியா நான் அமர்ந்திருந்தேன்
அவர்களுக்குப் படைத்த படையல்
என் முன்னே இருக்க..
ஏழு நாள் (அவள்) இலக்கியா
என்னைப் பார்த்து சிரித்திருந்தாள்..
அருகில் ஒட்டியிருந்த புகைப்படத்திலிருந்து!

அவள் புன்னகை
அவளுக்கு சொத்து..
அது அவள் தாய்க்கு வரம்..
அனைவருக்கும் அருமருந்து!

#மிகச்சமீபத்தில் சந்தித்த குழந்தை இலக்கியா நினைவாக..

# அமைதி

சொல்ல வேண்டாமென
இடைவிடாது சொல்கிறாள்!
தன் வலி தானே மறைத்து
எனக்கு வலி வரா வண்ணம்
இடைவிடாது சொல்கிறாள்!

அவளுக்காக இல்லை என்றாலும்
எனக்காக..
என் அமைதி அவசியம்!
கலைக்கப் பட்டாலும்
எனக்கு என் அமைதி அவசியம்

## அனுபவமே பாடம் சொல்கிறது

கேட்பவருக்கு சொல்லலாம்!
கேட்டு வா என்று
சொல்லி அனுப்பப் பட்டவருக்கும்
ஏதேனும் சொல்லலாம்!

சொல்லுங்கள்..
ஏதேனும் சொல்லுங்கள் என்று
சொல்லி விட்டுச் சென்றால்
என்னவென்று சொல்வது?

ஏதேனும் சொல்லத் தெரியாத நான்
அவளிடம் கேட்டு நின்றேன்!
அவள் சொன்னாள்
எளிதாய் சொன்னாள்
தான் யாரென்று..

அவள் சொல்லி முடிக்கையில்
அறிந்தேன் சொல்ல வேண்டியதை
அவளுக்கு சொல்ல வேண்டியதை
"தேவைப்படும் போது கேள்"
அதுவே செய்தி!

நான் சொல்லி முடித்தேன்
அவளுக்கு தேவைகள் வராது
அந்த நம்பிக்கையில்!
அவள் அறிவுத் தெளிவையும்
அவள் வலிகளையும்
அமைதியாய் கற்றபடி!

#மிகச் சமீபத்தில் சந்தித்த குழந்தை அகல்யா நினைவாக

## பிடிவாதக்காரி

பிடித்த கரத்தை
பிரிக்க மாட்டாள்!
வெட்டி எடுத்துத் தான்
வந்திருக்கிறேன்
மணிக்கட்டுக்கு கீழ்
என் கரத்தை
வெட்டி எடுத்துத் தான்
வந்திருக்கிறேன்!

அவள் பற்றிய கரம்
அவளோடு இருக்கு
கரமில்லா உடலோடு
நான் இருக்கேன்!

#அன்பு அதிகமானாலும் ஆபத்து தான். இது போன்ற வன்முறைகளையும் நிகழ்த்தி விடும்.

## நான்.. நீ.. நாம்!

உன் இடப்பக்கம்
நான் என்றாய்..
என் வலப்பக்கம்
நீ என்றாய்..
சரிபாதி நாம் என்றாய்!

சொல்லியபடி
செயலில்லாமல் போகவே
நானில்லாமல் போனேன்
நாமில்லாமல் போனோம்!!

#கல்லூரி காலத்தில் நான் முதன் முதலில் யாரோ.. யாருக்காகவோ எழுதித் தர கேட்டு எழுதிய வரிகளுக்கு நான் இட்ட தலைப்பும் இதே தலைப்பு தான் பொருளும் அதே தான். அப்போது எழுதியது காதலுக்காக... இப்போது எழுதி இருப்பது. அப்போது எழுதிய காதல் கவிதையிலும் சமத்துவம் பேசியிருக்கேன்னு இன்னைக்குத் தான் எனக்குப் புரியுது.

## பாட்டாய் பாடுவேன்!

படி படி என்று
பாட்டாய் படிப்பாள்
பள்ளிக் கூடமும் ஒதுங்காத
பறட்டைத் தலைக்கு சொந்தக்காரி
பாசமிகு என் ஆத்தா!

அவள் பாடிய பாட்டாலே
அவள் காலத்தில் நான் ஆனேன்
பட்டதாரி என் கிராமத்தில் முதன்முதலாய்!
பட்டம் பெற்றதை
பாட்டாய் பாடுகிறாள் அவள்!

பட்டம் பெற நான்
பட்ட பாட்டை யாரிடம்
பாடுவேன் வாய்விட்டு நான்!
பாட வசதியின்றி
பாட உரிமையின்றி
பட்டம் பெற்றும் ஊமையாய்!

படிப்பறியா மக்களுக்கு
பாடமெடுக்க வாய் திறந்தேன்!
பாடல் அது தான் - நான்
பாடும் பாடல் அது தான்!
பாட வேண்டிய பாடல் அது தான்!
பாட்டாய் பாடுவேன் - இனி
பாட்டாய் பாடுவேன் நானும்!

#அனைத்து பறட்டைத் தலை ஆத்தாக்களுக்கும், முதல் தலைமுறை பட்டதாரிகளுக்கும், காசு வாங்காமல் கிராமப்புறங்களில் பாடமெடுக்கும் ஆசிரியை ஆசிரியர்களுக்கும் சமர்ப்பணம்.

## அர்த்தமில்லா வாழ்வு

உனக்கான கடைசி வேண்டுகோளென
உன்னிடம் வைத்தது
உன் உள்ளத்தையும் எட்டவில்லை!
உன் செவியையும் எட்டவில்லை!
உன் நிகழ்கால செயல்கள்
உறுதி செய்யுது அதனை!

# நூலகத்தில்

பலமுறை சொல்லியும்
அருகிலிருந்த ஓர் இருக்கையில்
அமராமல் அவளிருந்தாள்!

அறிமுகமாகும் வரை
அனைவரும் அந்நியமாகத்தான்..
அகிலத்தில் உலாவர வேண்டும்!

அந்நொடியில் நான்
அங்கொரு அந்நியனாய்
அமர்ந்திருந்தேன்!

அவள் உள்ளத்தில் ஓடியது என்னவென்று
அந்த நொடியில் எனக்குத் தெரியாது!
ஆனாலும் எழுந்தேன் என்னிருக்கையிலிருந்து!

அண்ணனென அறிமுகம் செய்ததும்
அந்த தனி இருக்கையில் ஓர் ஓரமாய்
அமர்ந்து கொண்டாள்..

அவள் பணி முடித்து
அவள் ஊதியம் பெற வந்திருந்தாள்!
அவள் ஊதியம் பெறுகையில்..
அவர் தான் அறிமுகம் செய்தார் என்னை!

அறிமுகமான ஓரிரு நொடிகளில்
அகிலத்திற்கான செய்தியை சொல்லி
அடுத்த பணிக்காக புறப்பட்டாள்!

அச்செய்தி “**கனவை நினைவாக்குங்கள்**”
அந்த வசதி தனக்கில்லை அதனால்
உங்கள் பிள்ளைகளின் கனவை நினைவாக்குங்கள்!

சென்று விட்டாள் என நினைத்தேன்
திரும்பி நின்று தன் காலத்தையும்
தற்காலத்தையும் ஒப்பிட்டுச் சொன்னாள்!
அச்சு அசலாக அனைத்து தலைமுறையும்
ஒவ்வொரு புதிய தலைமுறையும்
ஒரு நாளில் சொல்லும் செய்தி!

அதை நீங்களும் சொல்லி இருப்பீர்கள்!
நானும் சொல்லி இருப்பேன்!
அக்காரணத்தாலே தனியாய் இங்கே
இனி நான் சொல்லவில்லை!

# அவள் மட்டும்

பயந்து பயந்து
பாசம் கொண்டாள்!
பயந்தது போல்
பாசம் வேசமானது!
வேசம் கண்டு
மனம் நொந்தாள்!
வேறு இடமின்றி
காத்து நின்றாள்!
காலன் வருகைக்காக
அவள் மட்டும்!

#பாசம் காட்டி வஞ்சிக்கப்படும் உள்ளங்களுக்காக

## ஓரிரு முறைக்காகத்தான்

ஒரு முறையோ... இரு முறையோ..
ஓராண்டில் ஒரு முறையோ.. இருமுறையோ
வாய்ப்புக் கிட்டும் சந்திக்க..

அதுவும் ஆயிரம் பொய்கள் சொல்லி
பல ஆயிரம் திட்டங்கள் தீட்டி
புறப்பட்டு வருவேன் உனைப் பார்க்க..

உண்மையைச் சொல்வதென்றால்
உன்னில் என்னைப் பார்க்க..
உன்னைப் பார்த்திருக்கையில்
நாழிகைகள் நகர்ந்தோடுவது தெரியாது
அக்கம் பக்கம் நிகழ்வது புரியாது

அக்கணத்தில் நீ மட்டும் தான்..
உண்மையைச் சொல்வதென்றால்
நான் மட்டும் தான் அங்கிருப்பேன்
உன் உருக்கொண்டும் என்னுருக் கொண்டும்!

நான் மட்டும் தான் அங்கிருப்பேன்
நீ போன பின்பும் உன் நினைவுகளோடு..
நீ எனக்கெனச் சொல்லிய சொற்களோடு..

நான் மட்டும் தான் அங்கிருப்பேன்
அந்த ஓரிரு நாட்களுக்காகத் தான்
நான் இம்மண்ணில் இன்னுமிருப்பேன்!

#ஒவ்வொருவரின் வாழ்வும் இன்னொருவர் வாழ்வை மேம்படுத்துவதில் நிறைவடைகிறது, இதன் அர்த்தம் சிலருக்கு மட்டுமே விளங்கும்

## ஓய்வு

ஏவுவதற்கு யாருமற்ற போதும்
ஏவியவை யாவும் முடிந்த போதும்
அவளுக்குக் கிட்டும் ஓய்வு..

ஏவுவதற்கு.. வேலை ஏவுவதற்கு
யாருமற்ற நிலையோ..
ஏவிய வேலைகள் முடித்து
யாதுமற்ற நிலையோ..
இதுவரை வாய்த்ததில்லை
அவளுக்கு!

இது தீராத ஓர் கவலை எனக்கு!
இன்று தீர்ந்தது!
இன்று தான் அவள் தன்
இறுதி மூச்சை
இவ்வுலகெல்லாம் பயணிக்கும்
காற்றோடு கலந்து விட்டாள்!

#ஓய்வே எடுக்காமல் பலரின் ஏவலுக்கும் உழைத்து உயிர் விட்ட அந்தக் கிழவிக்காக

## அவளாகி விட்ட அவன்!

அவளாகி விட்ட அவனுக்கு
அனுதினமும் அவளுக்கான
அகிலப் பிரச்சனைகள் தெரியாது!
அவளாகும் நாள் வரை!

அவளானதும் அவன் தேகம்
அடிக்கடி அவன்களால்
அங்குமிங்குமென அசிங்கமானது!
அவளை அணுவணுவாய்
அனுதினமும் அறிகிறான்
அவளாகி விட்ட அவன்!

#தினமும் சமூகத்தால் பலவாறு இன்னல்களுக்கு உள்ளாகும் திருநங்கைகளுக்குச் சமர்ப்பணம்

## கள்ள மௌனம் கலைக்குமோ சமூகம்?

இளவளின் முகம் சிதைந்து கிடக்கு..
உயிரற்ற அவன் உடல் அங்கே கிடக்கு..
அறையெல்லாம் உதிரம் சிதறிக் கிடக்கு..
குழந்தையவள் புணர்புழை அலங்கோலமாய்
சிதைக்கப் பட்டுக் கிடக்கு !
தடுத்த தாய் தன் உதிரத்தில்
மிதந்திருக்காள் எலும்புகள் உடைக்கப்பட்டு !
அவள் தன் புணர்புழையும் சிதைக்கப்பட்டு !

நடந்தவை யாவும் நடக்காததாய்
ஊரும் உலகும் இயங்கிக் கொண்டிருக்கு !
அந்த அநீதிக்கு நீதி கேட்டு
ஒருவன் மட்டும் ஓங்கி கதறி கொண்டிருக்கான் !
நடந்தவை யாவும் நடக்காததாய்
ஊரும் உலகும் இயங்கிக் கொண்டிருக்கு !

காவல்துறையோ கள்ள மௌனம் காத்திருக்கு !
அரசோ... வேற்று நாடு அரசாய் அமர்ந்திருக்கு !
போராட்டத்திற்குப் பின் பணிகள் துவங்கியிருக்கு !
அதிலும் சாதிய பாரபட்சம் தலை தூக்கி இருக்கு !

அநீதியே நிறைந்திருக்கும் இம்மண்ணில்..
நீதிக்காக.. நீதி கிட்டாமல்
மானத்தோடு உயிர் விடுவதையன்றி
வேறொன்றுமில்லை இல்லாதவனுக்கு !

*#உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் எழுதப்பட்டது. மீ டூ வை மிகப்பெரிய செய்தியாக்கிக் கொண்டிருந்த ஊடகங்கள் இந்த நிகழ்வுக்கு ஊமையாய் இருந்த வலி இன்னும் என் நெஞ்சை விட்டு நீங்காமல் இருக்கிறது.*

## யாரடி உண்டு?

உடைத்தெறிய வேண்டிய
உன் தடைகளை
நீயே நாளும் கட்டி எழுப்பினால்..
உன்னைக் காக்க
உலகத்தில் யாரடி உண்டு!

# நிலவானவள்!

தேய்ந்தாலும்
வளர்ந்து விடும்
நம்பிக்கை உள்ளத்தில்
உனக்கு வேண்டும் என்பாள்!
நிலவைக் காட்டிக் காட்டி!

அந்த நிலவைக் காட்டும்
அவள் விரல்களும் இல்லை!
புறத்தோடு அகத்திற்கும்
வலிமை சேர்க்கும்
அவள் வார்த்தைகள் இல்லை!

ஆனாலும் நிலவாய்
வானத்தில் வந்து பார்ப்பேன் - என
சொன்னபடி ஒவ்வொரு இரவும்
நான் பார்க்க
எனை வந்து பார்க்கிறாள்!
ஒவ்வொரு பகலும்
நான் பார்க்காமலும்
எனை வந்து பார்க்கிறாள்!
எப்போதும் எனக்குள் வாழுமவள்!

## ஓயாது ஒலிக்கிறாள்

ஊரெல்லாம் ஒதுக்கி வை..
உலகெல்லாம் ஒதுக்கி வை..
என் சொல்லை மட்டும்
உன் நெஞ்சில் வை..
ஓயாது சொல்கிறாள்..

ஒரு கால் நூற்றாண்டுகளை கடந்தும்..
உரிமைகளை தொலைத்து விடாமல்
ஒற்றைக் கருப்பையில் இருந்து
சில ஆண்டுகள் கழித்து வந்தவள்!

உறவுகளைக் கடந்து
உலகைக் கடந்து
பயணித்து விடாமல்..
பற்றி இழுக்கிறாள்..

பாவம் அவள் கவலை அவளுக்கு!
அவளுக்கு விளக்கும் அறிவும்!
அவள் விளங்கிடும் சொல்லும்
எனக்கு இல்லை என்பதறிய
வாய்ப்புகளுமில்லை அவளுக்கு!

# இன்முகத்துடன்

பிழைக்கத் தெரியா பிள்ளை ஒன்று
பிணம் தின்னும் கழுகுகள் மத்தியில்
கண் பறிக்கப்பட்டு கால்கள் முறிக்கப்பட்டு
தன்னந்தனியே தவிக்குதம்மா!
அது தன் நிலை சொல்லவும் வாயில்லா
தன் உரிமை கோரவும் இயலா ஊமையம்மா!

அத்தனையும் அகிலத்தின் நியதியென
அதன் காதினிலே சங்கெடுத்து ஊதுதம்மா
அகிலத்தைப் படைத்தேனென்ற பரம்பொருள்!
அன்பே வடிவான அப்பரம்பொருளின் நியதிகள்
அந்தக் குழந்தைக்கு விளங்காமல் தவிக்குதம்மா!

பாவமென வருந்தாமல் பாவியென சபிக்குதம்மா
பரம்பொருளை பாடிப்பாடி வாழும் கூட்டமெல்லாம்!
யார் செய்த பாவத்தை தன் தலையில் தாங்குதோ?
இல்லாத முன் பின் பிறப்புகளின் கதைகளால்
குழந்தையை பாவியாக்கி இதயத் துடிப்பை நிறுத்துதம்மா!
அதுவே தர்மம் அதுவே நியதியென போற்றுதம்மா!
இதுவோ உலகம்? இதுவோ வாழ்க்கையென? - அப்பிள்ளை
இன்முகத்துடன் தன்னுயிர் துறக்குதம்மா!

தொடரும்.. “அவளோடு ஒரு பயணம்”

**கல்விக்கு உதவலாமே!**

அன்புடையீர்,

உங்கள் அனைவருக்கும் எனது இதயம் கனிந்த வணக்கங்களும் வாழ்த்துக்களும். தொடர்ந்து வாசித்து ஆதரவளித்து வருவதற்கு நன்றி.

இந்த வார்த்தைக் கோர்வைகள் உங்களுக்கு பிடித்திருந்தால்..

**உங்களிடம் ஒரு விண்ணப்பத்தை வைக்கிறேன், அது மிகவும் முக்கியமானது மற்றும் அவசியமானது. இன்றைய சூழலில் கல்வியின் அவசியத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். தற்சமயம் இந்த வரிகளை நான் எழுதி முடிப்பதை சாத்தியப்படுத்தியதும், நீங்கள் வாசித்துக் கொண்டிருப்பதற்கும் அதுவே காரணம், அத்தகைய அடிப்படை பலன் அனைவருக்கும் கிடைத்திட வேண்டுமென நீங்கள் கருதினால்..**

- **குறைந்தது ஏதேனும் ஒரு அரசுப்பள்ளி மாணவனுக்கோ / மாணவிக்கோ அவர்கள் படிப்புக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவிடுங்கள்**
- **ஏதேனும் ஒரு ஏழை மாணவனுக்கோ / மாணவிக்கோ கல்லூரியில் படிக்க உதவிடுங்கள்**
- **உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அரசுப்பள்ளி மாணவ – மாணவியருக்கு ஏதேனும் ஒரு வகையில் வழிகாட்டிடுங்கள்**
- **அரசுப் பள்ளிகள் மேலும் சிறப்பாக செயல்பட எந்த வகையிலேனும் உதவிடுங்கள்**

மேற்கூறிய வேண்டுகோள்கள் நிறைவேற்றப்பட வேண்டியவை எனக் கருதினால் தொடர்ந்து பலரிடமும் இந்த வேண்டுகோளை நீங்களும் பகிர்ந்து கொள்ளுங்கள்!

படைப்புகள் பற்றிய உங்கள் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் எண்ணங்கள் என்னை வந்து சேர இந்த மின்னஞ்சல் முகவரியை பயன்படுத்தவும்.

**karuveli.mahendran@gmail.com**

தங்கள் ஆதரவுக்கு மீண்டும் நன்றி!

அன்புடன்

கருவெளி ராச.மகேந்திரன்

**இணைந்திருக்க சில வழிகள் :**

https://www.karuveli.wordpress.com | **மின்னஞ்சல்** : karuveli.mahendran@gmail.com

**கைபேசி எண்** : 94455 28556 | **படைப்புகளை உங்கள் மின்னஞ்சலில் பெற்றிட ஒரு முறை பதிவு செய்து கொண்டால் போதுமானது.** https://goo.gl/LC2dTD

**யூ- டியூப் சேனல்கள்:**

கருவெளி : https://goo.gl/pSYy8Y

ஊமைகளின் குரல் : https://goo.gl/qXn34p

மீயுசிக்கா : https://goo.gl/v33JY9

**உதவிட விரும்பினால்:**

நீங்கள் உதவ விரும்பியும் உங்களால் சரியான மாணவரையோ, பள்ளியையோ, தேவைப்படும் நபர்களையோ கண்டறிய இயலாமல் போனால் என்னைத் தொடர்பு கொள்ளவும். என்னால் இயன்றவரை என்னிடமுள்ள தகவல்களை பகிர்கிறேன்.

விலையின்றி அனைவரும் படிக்கவும் பகிரவும் வழிவகுக்கும் "கிரியேட்டிவ் காமன்ஸ்" உரிமம் மூலமாக தொடர்ந்து பல படைப்புகளை வெளியிடும் இந்த முயற்சிக்காக நீங்கள் உங்கள் பங்களிப்பை செய்திட விரும்பினால், எனது வங்கிக் கணக்கு விபரங்களை பின்வரும் முகவரியில் பெற்றிடுங்கள். இது, **முழுவதும் உங்கள் சுய விருப்பத்தின் அடிப்படையில் செய்யப்படும் பங்களிப்பாக இருக்க வேண்டும் என்பது எனது மனமார்ந்த வேண்டுகோள்.** *நேர் வழியில் / நியாயமான முறையில் சம்பாதிக்காத பணம் எதையும் அனுப்ப வேண்டாம் என்றும் வேண்டிக் கொள்கிறேன்.*

நன்கொடையளிக்க விரும்புவோர் இங்கே சொடுக்கவும்

அல்லது இந்த முகவரியை பயன்படுத்துங்கள் http://bit.ly/Donate2Karuveli

*அன்புடனும் வாழ்த்துகளுடனும்*

*கருவெளி ராச. மகேந்திரன்*

## என்னைப் பற்றி

மேற்குத் தொடர்ச்சி மலையின் பிரமாண்டத்தை தினந்தோறும் இரசிக்க வாய்ப்பிருக்கும், இவ்வுயிர் அழிந்தால் ஐந்தாறு ஆண்டுகளில் மனித இனம் அழிந்து போகுமென்ற புகழ் பெற்ற உயிரின் பெயர் கொண்ட "தேனி"யில் வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்கு பெற்றோரால் வைக்கப்பட்ட பெயர் மகேந்திரன். எனக்கு விபரம் தெரிந்து, என் தேடல் துவங்கிய நாள் முதலாய், எனது எழுத்துகள் மூலம் நான் பதிவு செய்யத் துவங்கிய நாள் முதலாய் கரு = ஆதியானது, வெளி = எல்லையற்றது, என்ற இரு சொற்களை இணைத்து "கருவெளி" அத்துடன் என் பெற்றோர் பெயரின் முதல் எழுத்துக்களை இணைத்து "கருவெளி" ராச. மகேந்திரன் என்ற பெயரில் எழுதி வருகிறேன்.

ஏறக்குறைய 15 ஆண்டுகள் காற்றாலை நிறுவனங்களில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி துறை, செயல்திறன் கண்காணிப்பு மற்றும் மேலாண்மை துறைகளில், பல்வேறு மட்டங்களில் பணியாற்றி விட்டு தற்சமயம் முழு நேரம் எழுத்துப் பணியோடு, கிராமப்புற மாணவ மாணவியர், அரசுப்பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்கு என்னாலான அறிவுப்பகிர்வைச் செய்து கொண்டிருக்கிறேன்.

மிகச் சமீபத்தில் கற்றுக் கொண்ட ஒலி, ஒளி மற்றும் இசை சம்பந்தமான அறிவினை சமூகத்திற்கு பயனளிக்கும் வகையில் பல வடிவங்களில் கொண்டு வரும் முயற்சியை துவங்கி உள்ளேன். தற்சமயம் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க, கவிதைகள் அனுபவப் பகிர்வுகளுக்காக "கருவெளி ராச.மகேந்திரன்", பொது மக்களுக்குப் பயன்படும் அரசு மற்றும் அரசு சார் தகவல்களை பகிர்ந்திட "ஊமைகளின் குரல்" மற்றும் இசைக்காக "மியூசிக்கா" எனும் மூன்று யூடியூப் சேனல்களையும் ஆரம்பித்து தகவல்களை பரிமாறி வருகிறேன்.

மேலும் பல முயற்சிகளை சமூக பங்களிக்கும் வகையில் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் இயற்கையோடு என் வாழ்க்கை பயணம் தொடர்கிறது. உங்களைப் போலவே என்னைப் பற்றி நானும் அறிந்து கொள்ள நிறைய விசயங்கள் இருக்கின்றன. வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

*அன்புடன் - கருவெளி ராச.மகேந்திரன்*

## எனது சில படைப்புகள்: (சனவரி 2019 நிலவரப்படி)

**இதுவரை :**

### *அமேசானில் கிடைக்கக்கூடிய தலைப்புகள்*

1. நாலு சொல்லில் - தொகுப்பு 1 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
2. நாலு சொல்லில் - தொகுப்பு 2 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
3. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 1 | கவிதைத் தொகுப்பு
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 2 | கவிதைத் தொகுப்பு
5. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியான அனுபவம் பற்றியது)

### *இலவசமாக வெளியிடப்பட்டுள்ள தலைப்புகள்*

1. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியான அனுபவம் பற்றியது)
2. என் மரணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்
3. மக்களாட்சியில் என் கடைசிப் பயணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்
4. குற்றால வலி(ழி) - சிறுகதை | உண்மைச் சம்பவம்
5. தீட்டு - சிறுகதை | உண்மைச் சம்பவம்
6. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 3 | கவிதைத் தொகுப்பு
7. அவளோடு ஒரு பயணம் - கவிதைத் தொகுப்பு ( மீ டூ )

### *தற்போது எழுதிக் கொண்டிருப்பவை :*

1. மரணப் பிடியிலிருந்து - சிறுகதைகள் - 2019
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 4 | கவிதைத் தொகுப்பு - 2019
3. அவனோடு ஒரு பயணம் - கவிதைத் தொகுப்பு - 2019
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 5 | கவிதைத் தொகுப்பு -2019

(2019ல் மட்டும் குறைந்தது 12 வெளியீடுகள் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது)

### *ஒலிப் புத்தகங்கள் :*

1. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் பகுதி 1 - நவம்பர் 2018 (மறு வெளியீடு)
2. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் - டிசம்பர் 2018 (மறு வெளியீடு)

### *காணொளிக் கவிதைகள் :*

1. நாலு சொல்லில் - முழுத் தொகுப்பு ( யூடியூப் சேனலில் உள்ளது)
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்புகள் 1,2,3… என அனைத்தும் விரைவில் நீங்கள் கேட்டு மகிழ வெளியிடத் திட்டமிடப்பட்டுள்ளன
3. கண்களை மூடிப் பார் - புத்தகமும் என்னுடைய அனுபவப் பகிர்வுடன் விரைவில் வெளியிடப்படும்.

***இசை வெளியீடுகள் :***

1. Where I am Going - **ஏப்ரல்** 2018
2. EDM 1.0 - **ஜீன்** 2018
3. So Easy - **அக்டோபர்** 2018
4. Protect Me - **நவம்பர்** 2018
5. The Inner Journey - Series - **டிசம்பர்** 2018
6. The Restless
7. The Nameless Series - 2019 Weekly Music Series (வாரம் ஒரு இசைக் கோர்வையை கேட்டு மகிழுங்கள்)

**புதிய நம்பிக்கைத் தொடர் :**

**அனைவருக்கும் பயன்படும் வகையில் "நீஉமுமு" / "NUMM" எனும் புதிய நம்பிக்கைத் தொடர் காணொளித் தொடராக துவங்கப்பட்டுள்ளது**. இது மும்மைத் தத்துவத்தின் அடிப்படையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இவை அத்தனையும் நடைமுறை வாழ்க்கையின் அடிப்படையில் உருவாக்கப்படுகின்றன. மாதத்திற்கு இரு காணொளிகள் எனத் திட்டமிடப்பட்டுள்ளது.

இங்கு பட்டியலிடா பல பணிகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்பதையும் உங்களோடு பகிர்ந்து கொள்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.

United Nations Sustainable Goals பற்றி மேலும் அறிந்து கொள்ள

https://www.un.org/sustainabledevelopment/sustainable-development-goals/

இலக்கு 5 : பாலின சமத்துவம் / Gender Equality

https://www.un.org/sustainabledevelopment/gender-equality/

# அவளோடு ஒரு பயணம்

கவிதை தொகுப்பு



அவள் உலகத்தை அவளுக்காக சொல்லிவிடும் சிறு முயற்சி தான் "அவளோடு ஒரு பயணம்". இப்படைப்பை இப்புவியில் வாழும் அனைத்து பெண் குழந்தைகளுக்கும், சகோதரிகளுக்கும், முதியோர்களுக்கும், திருநங்கைகளுக்கும், அவர்களுக்காக குரல் கொடுத்து செயலாற்றும் ஆண்களுக்கும் என் தாய்க்கும், தந்தைக்கும் அர்ப்பணிக்கிறேன்.

இன்னொருவராய் உணர்ந்து சொல்வது செயல்படுவது அத்தனை எளிதல்ல என்பதனை முழுவதும் உணர்ந்தும் அறிந்தும் தான் இப்படைப்பைத் துவங்கினேன். அதற்கு ஊக்கமளித்தது நம்பிக்கையளித்தது உலகின் ஏதோ ஒரு மூலையிலிருந்தாலும் அவர்களின் உணர்வை பிரதிபலிப்பதாய் அந்த இன்னொருவர்கள் வார்த்தைகளாலும் செயல்களாலும் உறுதி சொல்லியது தான்.

குழந்தைகளுக்கு பயன்படும் வார்த்தைக் கோர்வைகள் இப்படைப்பில் இருந்தாலும் அவர்களுக்குத் தேவையான படைப்பை கண்டறிந்து பகிரும்படி வயது வந்தோருக்கு வேண்டிக் கொள்கிறேன். குழந்தைகள் கையில் இப்புத்தகத்தை கொடுக்க வேண்டாமென்றும் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படைப்பு, ஐக்கிய நாடுகளின் வளர்ச்சிக்கான இலக்குகளில் ஒன்றான இலக்கு 5: பாலின சமத்துவம் என்பதை உறுதி செய்யவும் ஊக்கமளிக்கவும் நடைமுறை சாத்தியமாக்கவும் நாம் பங்களிக்க வேண்டிய அவசியத்தை எடுத்துரைக்கவும் நிகழ்காலத்தில் பாலின பாகுபாடுகளை வெளிச்சமிட்டு நம் கண் முன்னே நிறுத்தவும் உருவாக்கப்பட்டது. அதை நிறைவேற்ற அனைவரும் கை கோர்ப்போம் என்ற வேண்டுகோளையும் உங்கள் முன்னே வைக்கிறேன்.

பாலின சமத்துவம் என்பது அடிப்படை மனித உரிமை மட்டுமல்ல. அமைதியான, வளமான மற்றும் நிலைத்திருக்கக் கூடிய ஒரு உலகை கட்டமைப்பதற்குத் தேவையான அவசியமான அடித்தளமாகும். – ஐக்கிய நாடுகள் கூட்டமைப்பு

ஐக்கிய நாடுகள் கூட்டமைப்பு என்றால் ஏதோ ஒன்று என்று நினைக்க வேண்டாம் இப்புவியில் வாழும் நீங்களும் நானும் தான் அது.

வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

அன்புடன்

கருவெளி ராச.மகேந்திரன்

கருவெளி கலையகம் வெளியீடு

94455 28556